ய்பவோ அறிந்தேமில்லை, அம்மையை நோக்கிச் சிறிது புன்முறுவல்செய்து மூவேந்தரிற் சிறந்த பாண்டியனது பெறுதற்கரிய மகள்நீ! அன்றியும் தேவருலகத்துள்ள பஞ்சதாருவும் நினதுபணியைச் செய்யப்பெற்று இவ்விடத்திலிருக்கின்றது உனக்கு அருமையாப்ப பெறத்தக்கதுயாது? பிறருடைய செல்வங்களெல்லாம் நின்னதல்லவோ? ஆதலால் அளவற்றநின்செல்வத்தின் பெருமையை நாமறிய செய்வித்தாற்போலு மிருக்கின்றது நீசெய்வித்தவிருந்தினையுண்ண நங்கணத்தினுள் பசியாற் களையடைந்தவராகி யொருவரையுங்காணேம் முல்லையரும்பைப்போலும் தந்தங்களை யுடையாய் அதற்கு யான் செய்யத்தக்க தென்னென்றார். பின் சமீபத்திலேநின்ற குண்டோதரன் வயிற்றினிடத்து வடவாக்கினியைப் பிரவேசிக்க நினைத்தார். அதுவயிற்றினிடத்துவந்து எரிபசியாகப் பொருந்தி விடமுண்டவனைப்போல உடல் சோர்ந்து வியர்த்து ஆவிபொடுக்கமுற்று ஐயனே! பசியினால் வருந்துகின்றேனென்ன, அதைக்கேட்ட சுவாமி அம்மையைப் பார்த்துக் குடைபிடிக்கும் இந்தக் குறியதாளையுடைய பூதத்துக்கு ஒருபிடி சோறிடுங்கள் அப்புறஞ் சொல்லுகிறேனென, சுவாமியை வணங்கி நல்லதென்றுபோக, பூதமும் உடனே தளர்ந்த நடையினை யுடையதாய் கண்கள் புகைந்து வாய்புலர்ந்திடப் போக இராஜகன்னிகையின் ஏவலினால் ஏவலர் அபபசி நோய்கொண்டவனை இட்டுக்கொண்டுபோய் சோற்றுமலைமுன் விட்டார்கள். உடனே அப்பூதம் அச்சோற்றுமுன் னின்றதைக்கண்டார்கள். அதையெடுத்து உண்டதையும் அங்கிருந்த சோற்றையும் ஒருவருங் கண்டாரில்லை. அதையறிந்தசிலதோழிகள் கைகளைநெரித்து அதிசயப்பட்டார்கள். சிலர் திடுக்கட்டு மயங்கினார்கள். சிலர் கண்களைமூடிக்கொண்டு ஓடினார்கள். பின்பு அப்பூதம் நெய்முதலியவற்றைப்போக்கி முனைபொடியாமற் சமைத்த அன்னமும்-பாற்கறியும்-பொரிக்கறியும்-இனிய பயரினாற்செய்த கறியும்-பின்னும்பலவகைக்கறிகளும் பாலும்-தயிரும்-நெய்யும்-தேனும் ஆகிய அளவில்லாதனவற்றை மிடாக்களோடு எடுத்து வாயில்விட்டுண்டான் பின்னும் பலவகைப் பழக்குவியல்களும், பலகாரங்களும், கரும்புகளும், தேங்காயும், இவைகளன்றி வேகாத அரிசி காய்களின் வருக்கம் முதலியவற்றையும் எடுத்துண்டு அளவற்ற நவதானியங்களையுமெடுத்து வாயிலிட்டுண்டான். இவ்வளவு மிகுதியான பொருள்களையும் தனது பருத்த குறிய கையினால் வாரித் தனது பெரியவயிற்றினிடத்தி விடவும் நெய்த்துடுப்பால் நெய்யை யெடுத்துவிட்டு ஆகுதிபண்ணிய ஓமாக்கினியைப்போல மிகுந்து நவத்துவாரங்களிலும் தீபனாக்கினி கொளுத்த அதைக்கண்ட அங்கயற்கண்ணம்மை அதிசய மடைந்து தனதிடத்தன்புள்ள நாயகனுக்கு முன்னர்சென்று நாணத்தோடு விளங்காநின்ற மலர்களையுடைய குழலை தோளின்மீ திருத்தித் தளர்ந்து நிலத்தை காலாற் கிழித்துக்கொண்டு நின்றனள். சோமசுந்தரக்கடவுள் தேவியினது நிலைமையைக்கண்டு அறியாதவர்போல கேட்கத் தொடங்கி நானனுப்பிய பூதம் உண்டு மிகுந்ததுண்டாயிருக்குமானால் இன்னம் பூதகணங்களையனுப்பி உன் மனது சந்தோஷிக்கும்படி யுண்பிப்பேனென்றுசொல்ல தேவி ஐயனே! நீங்களனுப்புவித்தபூதத்துக்கு அங்குள்ள வெந்தபொருள்களையும், வேகாதபொ

ருள்களையும் உண்டும் பசியடங்கவில்லை இன்னும் கொடியபூதவீரரை அனு ப்புவீராகில் இவ்வுலகம் யாவையும் எடுத்து வயிற்றினிடத்து வைப்பாரே ஆதலால் உமக்கு உகாந்தகால உருத்திரனென்னும் பெயர் தெளிவாகத் தோன்றுகின்றது என்று சொல்லிக்கொண் டிருக்கும்போது மூன்றாம்பிறை போன்ற பல்லினையும் குகைபோன்ற வாயினையுமுடையபூதம் தீபாக்கினியா னது தன்னைச்சுட அதனால் வருந்திக் கடவுளுக்குமுன்பாகவந்து வெள்ளி யம்பலத்தில் நடனஞ்செய்த சோமசுந்தரக் கடவுளே! எம்பிராட்டி சமைத் துவைத்திருந்த அன்னம் முதலியவைகள் இமையமலைகள்போலு மிருந்தன, அதனையெடுத்து யானுண்டும் என்பசி தணிந்ததில்லை, இறந்தவர்க்குக் கொ டுத்துண்ணாதவர் வயிறுபோல் எரிகிறதென்றுசொல்லி இழிந்தவர்களது திரி புரத்திலிட்ட தீயானது மிகுந்த பசியுருவமாகி அடியேனது வயிற்றினிடத் துக் குடியாகப் புகுந்ததோ வென்று கையோடு கையடித்து அண்டங்கள் வெடிபடக் கதறுவன் ஐயகோவென்று சொல்லுவன். பெருமூச்சுவிடுவன். உயிர்நீங்கியதுபோலத் தளருவன்.

## குண்டோதரனுக்கு அன்னமிட்டபடலம்

முற்றிற்று.

---

சிவமயம்.

எட்டாவது

# அன்னக்குழியும் வைகையுமழைத்தபடலம்.

கலிநிலைத்துறை

வேதநாயகன்பாரிடவேந்தனுக்கமையா
வோதனாதிகளருத்தியதன்மையீதுவையும்
போதராமைபாலமைவுறப்போனகக்குழிதந்
தோதமாநதியருத்தியசெய்தியுமுரைப்பாம்.

**இதன்பொருள்.**

பூதகணத்தலைவனான குண்டோதரனுக்கு (வயிறு) நிரம்பாத போசன பதார்த்த முதலானவைகளை உண்பித்ததன்மை இதுவரைக்குமாம். (இனி மேல்) இவைகளும் போதாமையால் வேதங்களுக்கு நாயகராகிய சோமசுந்தரக்கடவுள் (குண்டோதரனது வயிறு) நிரம்பும்படியாக அன்னக்குழியையுங் கடலையொத்த பெரிதாகிய வையையும் வரவழைத்து உண்பித்த செய்தியையுஞ் சொல்லுவாம்.

இடபவாகனத்தை யுடைய சோமசுந்தரக்கடவுள் பின்பு தடாதகையைப்பார்த்து உள்ளேநகைத்து மிகுந்த பசியையுடைய குண்டோதரன்பொருட்டு அன்னத்தைத்தருகின்ற புவனமாகத் தன்னுள்ளத்தி னினைத்தனர் அவள் நினைக்குமுன்வந்து நான்கு பெரிய திசைகளிலும் உள்ள தயிர்க்கடலும் மத்தியில்பூமியைக்கிழித்துக்கொண்டு ஊற்றாக நான்கு கிடங்காகியெழுந்ததுபோல மாறுபடுதலில்லாத சுவையினையுடைய வினியதயிரும், வெள்ளிய நெய்சாதமும், நாலு குழியிடத்திலும் பொங்கி மேலெழுந்தது. சிறந்த சந்திரகுலத்திற் பிறந்த பாண்டியன் மருமகனாகிய சோமசுந்தரப்பாண்டியன் அந்தப் பெருவயிற்றினையுடைய பூதத்தைப்பார்த்து உன் பசிதணிய உண்ணென் றுத்தரவுசெய்ய அப்பூதத்தலைவன் அந்தத்தயிர்க்கிடங்கருகில் அலைகடல்கலக்கு மத்தெனத் தனதுகைகளை யுள்ளேவிட்டு எடுத்தெடுத்து வாயில்விட்டு உண்டிட வேதநாயகனது திருவடியிற் பத்திவைத்து மோக்ஷத்தையடைந்தவர்கள் பழவினைத்தொடர் போயதுபோல பசிநீங்கி அவ்வன்னத்தையெடுத்தெடுத்து ஒழியாமல் வாயிலிட்டுண்டதால் உடம்பெல்லாம் வயிறாகி வீங்கினான். பூமிகிழியும்படி மலைபோல் விழுந்தான். மூச்சுவிடக்கூடாமல் நிலத்திற்புரண்டவனாகி தாகத்தின் பொருட்டு நீரைவிரும்பி அவ்வூரில் நீருள்ளகுளம் ஏரிகளைத் தேடுகிறதற்கு எழுந்து தம்முயிரையொத்த கணவரைப்பிரிந்த பெண்கள்போல அன்று மலர்ந்த நீலோற்பலமலர்களும், தாமரைமலர்களும் வாடும்படி தடாகங்களும் ஏரிகளும், குளங்களும் வறள வாயை வைத்துக் கிணறுகளிலுள்ள நீர்களும் பசையறக் குடித்தும் தாகத்

தைச் சகிக்கக்கூடாதவனுப் வருந்திக் கங்கையைத் தம்முடையசடையிலே யுடைய சிவபெருமானது பாதத்தைக் கருதியிரங்க, நாதனும் தனது திருமுடியின்கணுள்ள கங்கையைப்பார்த்து நிறைந்த நீரலைகளே மாலிகையாக வுடைய கங்கையே! நீயிந்த அகழியாற் சூழப்பட்ட மதிலையுடைய மதுரையினிடத்து மிகுந்த நீர்ப்பெருக்கையுடைய ஆறுகச்சீக்கிரமாக வரக்கடவாயென்று கட்டளையிட, உடனே அக்கங்கையானவள் சடையைவிட்டு நீங்கி ஒருவார்த்தை சொல்லத்தொடங்கினாள். என்னெனில் முன்னொருகாலத்தில் பகீரதன்பொருட்டு ஒரு நீர்நதமாய்ச்சென்று அதில் மூழ்குகின்றவர்கள் குற்றம்பொருந்திய தீவினைத் தொடக்கறுத்துச் செல்லென்று பணித்தாய் இன்றும் ஒருநதியாகெனச் சொல்லுவாயாகுல் என்னைத்தரிசித்தவர்களும் மூழ்கினவர்களும் கையாலேனும் பரிசித்தோர்களும், பவத்தொடர்ச்சியின் பற்றுவிட்டுத் தேவரீரிடத்துப்பக்தியும்-கல்வியும்-ஞானமும்-வீடும் பெறும்படி பணித்தருளக் கடவாயென்று சோமசுந்தரக் கடவுளிடத்து வரம்பெற்றுக்கொண்டு மிகுந்த வேகமோடெழுந்து பெரியநதியாக ஆகாயத்தினின்று மிழிபவளாமென வரத்தொடங்கினாள்.

மகமேருவை வில்லாகவளைத்த சிவனது முடியின்கணுள்ள கங்கையானவள்வளைந்த அலைகளாகிய கையையும் முத்துகளாகிய தந்தங்களையும், நுரைகளாகிய வஸ்திரத்தையும், கொடியாகிய மருங்கினையும் கருமணலாகிய அளகத்தையும், சேல்களாகிய விழிகளையும் பெற்றுவருபவள் வாசனை பொருந்திய அகில் விருக்ஷங்களையும், பொரியரையினையுடைய வேங்கைமரங்களையும், பிரகாசம் பொருந்திய இரத்தினங்களை யுடைய மலைகளோடு அரைபடவும், பெரியகிளைகளலறிடவும், அடியோடு விரைவில் அகழ்ந்து சந்திக்கின்ற செருப்புக்காலினை யுடைய குறிஞ்சிநிலமாக்களது சிறியவூர்களை அடியோடு பறித்துக் கரைகளிற்படும்படி பெரிந்து காற்றைப்போல மிகுந்த விசையோடுவந்துபெட்டைமானோடு ஆண்மான்களையும், பெண்யானைகளோடு ஆண்யானைகளையும், வாரிக்கொண்டு பிரிவில்லாத ஒருமரக்காடுகளை அடியோடு பேர்த்துக் கருங்குரங்குகள் வயிற்றிலணைத்த குட்டிகளோடு தங்களைத் தழுவிய ஆண்குரங்குகளையும் அவைகள் வாசம் பண்ணுகின்ற மரக்கூட்டங்களோடும் குறிஞ்சிநிலமாக்களது கொடிய கணைகளோடு வில்லுகளையும், தினைப்புனப்பரணோடு கவண்களையும் வாரிக்கொண்டு வருகின்ற அவ்வாற்றின் அலைகள்நெடியமலைகளை அடியறும்படி மோதுகின்றன, அவற்றையகழ்கின்றன, பள்ளமான மடுவை மேடாக்குவன, கிளைகளையுடைய மரநிரைகளை தலைகீழாக இடிகரைதோறு நடுவன, கடலினோரத்திலுள்ள பெரிய பூமியை யிருபிளவுபடவருவன, மிகுந்த வலியினையுடையன, பெரிய மரங்களைத் தோண்டுகின்ற மிகுந்த வலியினையுடையன, வயிரமில்லாத மரங்களை முறிப்பன, இரத்தினங்களை யெடுத்து வீசுவன, வேகமாகச் செல்லுகின்றன, யானைமதங்களோடு வண்டுகளை யிழுத்துச் செல்லுவன, நுரைகளாகிய முகபடாத்தையுடையனவாகியும் வருதலினால் அவ்வாறுயானையையொத்திருந்தது. நீண்டபிலத்திலே செல்லுகின்ற நிலைமையை யுடையனவாயும், திருமலனாகிய பரமசிவனது சந்திரனையணிந்த திருமுடியின்மீது ஆடுகின்ற

செயலினை யுடையனவாயும் பிரகாசத்தை யுமிழாநின்ற அரியமாணிக்கங்களைத தன்தலையிலுடையனவாயும், நீண்டுவளைந்த நடையினை யுடையனவாயும், நிறைநிறையான குறுகிய பல கால்களினு லோடுகின்ற வலியினையுடையனவாயுமிருத்தலால் வளைந்தவுடலையுடைய பாம்பென்று சொல்லும் படியாகவும் வராநிற்கும். இவ்வாறு வரும் நதியானது கல்வித்தேர்ச்சியில்லாதவர் செய்த கவிபோலக்கலங்கி கல்விகேள்வியில் வல்லவர்கள் செய்த கவிபோல் பலசிறப்பாகிய துறைகள்தோன்றப்பொருந்தி செல்லுகின்ற வழிகள்தோறுமபொருளாழ்ந்து தெளிந்து தேயததிலுள்ள யாவரும் விரும்பி அப்பயனைக்கொள்ளும்படித் தங்கிற்று.

வண்டுகளது ஒளிநீங்காத மலர்களையுடைய சடையினின்றும் வந்த நதியை சோமசுந்தரக்கடவுள்கண்டு பிளவுபட்ட வாயைத்திறந்துகொண்டு என் விடாய்தணிநதே னில்லையென வெம்பி வீழ்ந்த குண்டோதரனை அவ்வாற்றினிடத்துவிட அவன் அவ்வாற்றையடுத்து அதனுள்ளிறங்கி வலியோடுந்தனதிரண்டு கைகளைதூக்கிக் கரைகளிலேற நீட்டியோடும் புனலைத்தடுத்து மலைபோலுயரும் புனலை வாயைத்திறந்து தன்தாகவிடாயும் மேகமும் வெட்க உண்டு மகிழ்ச்சிகொண்டு பரமசிவன் திருமுன்னர் வந்து அவரது திருவடியை வணங்கிக் கூத்தாடிப்பாடி ஆரவாரித்து அளவற்ற கீதங்களைப் பாடினன். பாட்டின் பொருளாகிய பரமசிவன் அப்பாட்டின் வீரனது பாடலைக்கேட்டு மகிழ்ந்து அவ்வையைநதியாற் சூழப்பட்ட மதுரையையபரசாண்டிருந்தனன். பரமசிவனது சடையினின்றும் வந்ததால் அந்நதிக்குச் சிவகங்கையென்றும் அக்கடவுளதுவுருவந் தெளிந்தோர்க்கு ஞானந்தரலால் சிவஞான தீர்த்தமென்றும், காற்றைப்பார்க்கிலும் வேகமாக வருவதால் வேகவதியென்றும், கிருதமாலையென்றும் பெயராகும்.

அன்னக்குழியும் வையையுமழைத்தபடலம்
முற்றிற்று.

---

சிவமயம்.

ஒன்பதாவது

# எழுகடலழைத்தபடலம்.

கோச்சகக்கலிப்பா.

முடங்கன்மதிமுடிமறைந்தமுடித்தென்னன்குறைகன்னற்
கிடங்கொடுநதியழைத்தகிளர்கருணைத்திறனிதுமேன்
மடங்கல்வலிகவர்ந்தான்பொன்மாலைபடிந்தாடவெழு
தடங்கடலுமொருங்கழைத்ததன்மைதனைச்சாற்றுவாம்.

இதன்பொருள்.

மடங்கலான இளம்பிறையினைத் திருமுடியினிடமாக மறைத்த மணிமுடியினையுடைய சௌந்தரபாண்டியர் குண்டோதரனுக்கு அன்னக்குழியையும் வையையாற்றையும் வரவழைத்த பிரகாசம்பொருந்திய திருக்கிருபைத்திறம் இதுவரைக்குமாம். இனிமேல் நரசிங்கக்கடவுளினது பலத்தைத் (சிம்புள்வடிவமாய்க்) கவர்ந்துகொண்ட சோமசுந்தரக் கடவுளானவர் காஞ்சனமாலையார் ஸ்நானஞ்செய்ய விசாலம்பொருந்திய சத்தகடலையும் ஒருமிக்க வரவழைத்த தன்மையினைச் சொல்லுவாம்.

உவமை சொல்லுதற்கரிய பரம்பொருளானவர் பாண்டியனுருவமாகி உலகமெல்லாந் தனது வெண்கொற்றக்குடையின் நீழலிலிருந்து செங்கோல் செலுத்துநாளில் மெய்ஞ்ஞானமாகிய அரும்பொருளையுணர்ந்த இருடிகளும் முனிவர்களும் வரன்முறையாகச் சந்தித்து வரும்போது வேதமுனிவராகிய கௌதமரும் வந்துகண்டு திரும்பிப்போகுங்காலையில் கற்பினையுடைய காஞ்சனமாலை யரண்மனையிற் புகுந்தார், அப்பொழுது காஞ்சனமாலை அவரது வரவையேற்று உபசாரவார்த்தைகளைச் சொல்லிப் பொன்னாசனமிட்டு வணங்கி அவரை நோக்கி ஐம்பொறிகளையும் வென்று அளவுபடாத நான்கு வேதத்தின் முடியில் விளங்காநின்ற பொருள் பரமசிவமென்றறிந்த சுவாமிகளே! நீக்குதற்கரிய பிறவித்துன்பத்தை நீக்குதற்குக் காரணமான தவத்தை அடியாளுக்கு அனுக்கிரகம் பண்ணவேண்டுமென கருணைக்கடலாகிய முனிவர் சிகாமணியானவர் காஞ்சனமாலையை நோக்கி அம்மா நீசெய்த தபோபலத்தினாலே இவ்வுலகத்தையெல்லாம் பெற்று வளர்த்த தடாதகைப்பிராட்டியாருக்குத் தாயானாய், பரமசிவனே உனக்கு மருமகனாகுஞ் சிறப்பைப்பெற்றாய், வெற்றியையுடைய மலயத்துவசபாண்டியனுக்கு மனைவியானாய், இப்படிப்பட்ட நீ யறியாததவம் இவ்வுலகத்தில் யாரறிவார் ஆயினும் சொல்லுகிறேன் கேள்.

மானதமென்றும், வாசிகமென்றும், காயிகமென்றும், குற்றமற்ற தவங்கள் மூன்றாம் இவற்றுள் மானதமாவது தருமஞ்செய்தலினும், தானஞ்செய்தலினும், மனம்வைத்தலும், தயை-பொறுமை-உண்மை-சிவனைத் தியானித்

தல்-பஞ்சவிந்திரியங்களை யடக்குதல்முதலிய அனந்தமாம், இவைகளை மனத்தாற்செய்தலாம். வாசிகமாவது ஸ்ரீபஞ்சாட்சரமோதல், தருமநூலோதல், பஞ்சசாந்திஜெதல், வேதஞ்சொல்லும் சதவுருத்திரந் தோத்திரஞ்செய்தல், பெரியதருமங்களைக் குற்றமறவெடுத்தோதல், முதலநந்தம், இவைவாக்காற் செய்தலாம். காயிகமாவது பரமசிவனை யருச்சனைசெய்தல் ஆலயத்தை வலஞ்செய்தல், எதிரினின்று வணங்குதல், கடவுள் வாழாநின்ற பல திருப்பதிகளைப்போய் வணங்குதல், திருப்பணிசெய்தல், கங்கைமுதலிய தீர்த்தயாத்திரைசெய்தல், இவைமுதலிய பல இவைக்காயத்தாற்செய்தலாம் இம்மூன்றில் காயிகமே சிறந்தது இப்புண்ணியங்களுக்குள் தீர்த்த யாத்திரையே யதிகம். அவற்றினும் கங்கை முதலிய தீர்த்தங்களில் தனித்தனியாகப்போய் ஸ்நானஞ்செய்த லதிகம். இவற்றினும் இந்நதிகளெல்லாம்வந்துசேரும் சமுத்திரஸ்நானமதிகம் என்று முனிவர்சொல்லக் காஞ்சனமாலை சமுத்திரஸ்நானஞ்செய்யத் துணிந்து தன்மகளாகிய தடாதகைப் பிராட்டியாருக் குரைக்க, அப்பாண்டியர் தவக்கொழுந்தாகிய அங்கயற்கண்ணம்மையார் இது செய்தியைப் பெருமானுக்குச் சொல்லுவேனென்று சென்று பெருந்தகையாகிய அரசர் பெருமான் திருமுன்னர் அன்னம்போல்நின்று அன்று குண்டோதரனுக்கு அன்னக் குழியையும் ஆற்றையுமழைத்த கிருபைக்கடலே! என்தாய் இப்பொழுது கடலாட விரும்பினளென்று சொல்லி யிரந்தாள். கடவுள் தன்றேவியின் திருமொழியைக் கேட்டுக் கடலொன்றோ! எழுகடலையும் இம்மதுரையுள் வரும்படி கூவியழைப்போமென்று சொல்லி அவற்றை நினைத்தார். உடனே யம்மதுரைக்குக் கீழ்த்திசையில் ஒருகுளத்தில் எழுவகைப்பட்ட நிறத்தோடு சரிந்தமுகத்தினையுடைய சங்கங்கள் வாய்திறந்தொலிக்கவும், வெள்ளியநுரைகள் ததும்ப, சுறுமச்சங்கள்பாய, முத்துகளை யெடுத்தெறியும் நிரையான அலைகள் அண்டமுகடுவரையி லெழும்ப, எழுகட்லும் ஆரவாரித்தெழுந்து அவற்றைக்காணும் அந்நகரிலுள்ளார் நடுங்க, கலியுகமுடிவில் பிரமாவின் படைப்புமாறும்படி யெழுந்ததெனக் கொதித்தெழுந்த கடலானது சர்ப்பாபரணராகிய பரமசிவனது ஆக்ஞையால் அவனடிகளைச் சென்றடைந்தவர்க ளடங்கியதுபோல் அடங்கிற்று. பொற்றாமரைத் தீர்த்தமானது தன்னிறம் எழுகடலினது ஒப்பற்ற நிறத்தோடு கலந்து பொலிவுபெற்று மின்னலைப்போலும் விளங்குகின்ற சடையானதுதாழ வெள்ளியம்பலத்து நடனஞ்செப்பும் பரமசிவனது நிறத்தைப்போல் எட்டு வண்ணத்தோடும் விளங்கிற்று.

எழுகடலழைத்தபடலம்

முற்றிற்று.

---

சிவமயம்.

பத்தாவது

# மலயத்துவசனையழைத்தபடலம்.

கலி விருத்தம்.

எழுகடலழைத்தவாறியம்பினோமினிச்
செழுமதிமரபினோன்சேணிழந்ததன்
பழுதில்கற்பில்லொடும்பாவைதோய்ந்தவ
னழகியதிருவுருவடைந்ததோதுவாம்.

இதன்பொருள்.

எழுகடலழைத்த வகையினைச்சொன்னோம், இனிமேல் செழுமையானசந்திரகுலத்தரசனாகிய மலயத்துவசபாண்டியராஜன் இந்திரபதவிவிட்டிழிந்து தனது மனைவியாகிய குற்றமற்ற கற்பினையுடைய காஞ்சனமாலையாரோடும் எழுகடலிலே ஸ்நானஞ்செய்து பரமேச்வரரது அழகிய சாரூபபதவியாகிய திருவுருவமடைந்ததைச் சொல்லுகின்றோம்.

சோமசுந்தரபாண்டியன் தடாதகைப்பிராட்டியாரோடும் எழுந்தருளிவந்து அவ்வெழுகடலின் பக்கத்திலுள்ள சந்தனம் - மரவம்-மந்தாரம்-மாவகுளம்-பாடலம் இவைகள் கலந்துள்ள நந்தவனத்தில் ஒருசிம்மாசனத்தின்மீது எழுந்தருளியிருந்து முறுக்கவிழ்ந்த மல்லிகை - முல்லை-சண்பகம்-இம்மலர்களை இளைஞரும் சேடியர்களும் கொய்துகொடுக்க அவைகளை வாங்கி மோந்து ஆசைவேறுபாடின்றி யிருக்குங்காலத்தில் சுந்தரபாண்டியர் தன்காதலியைநோக்கி உன்பொருட்டாக எழுகடலையும் இந்நகரின்கண் ணழைத்தனம் நின்னன்னையே இவ்விடத்துவந்து ஸ்நானஞ்செய்ய அழைப்பாயென தடாதகைப் பிராட்டியாரும்போய் தாயைக்கொணர்ந்து குளத்தினிடத்துவர காஞ்சனமாலை புராணநூல்தேர்ந்த முனிவர்களை நோக்கிச் சமுத்திரஸ்நானஞ்செய்யும் விதியாதென, குற்றமற்ற கற்பினையுடையாய் நாயகன்கைத்தலத்தைப் பிடித்துக்கொண்டாவது, இல்லையேல் பிள்ளையின் கைத்தலத்தைப் பிடித்துக்கொண்டாவது, அதுவுமில்லையேல் பசுவின் கன்றின்வாலைப் பற்றிக்கொண்டாவது, சமுத்திரஸ்நானஞ்செய்தல் முறைமையென, அம்முனிவரது வாய்மையைக்கேட்ட காஞ்சனமாலை முற்பிறப்பில் குறைவறத் தவஞ்செய்யாத கொடியபாவியாகிய எனக்குக் கொழுநனும் குமாரனுமில்லையே, இனிப்பெற்று மூழ்குவது பசுவின் கன்றலால் வேறுண்டோவென்று தடாதகைப்பிராட்டியைப் பார்த்துச்சொல்ல, பிரமபதத்தையும் விரும்பினவர்க்குக்கொடுக்கும் நாதனதுயிர்த்துணையாகும் நாயகி தன்னுயிர்க்கிழவனாகிய பரமசிவத்தை யடைந்து வணங்கி தன்னன்னையின் குறைமொழியைச்சொல்ல மன்னவன் இந்திரனோடுகூட விருக்கின்ற மலயத்துவச பாண்டியனைத் தன் மனத்தில் நினைக்க அப்பாண்டியன் மகமேருவை வில்லாகவுடைய பெருமா

னது திருவுள்ளத்தை யுணர்ந்து சிறையையுடைய மலைகளையெல்லாம் அழித் தவனாகிய இந்திரனது ஆசனத்தை விட்டுத் தேவவிமானத்தின்மீது எழுகட லினிடத்துக் கிருபையையுடைய இனிய வமுதம்போன்ற பரமசிவத்தைப் பெண்பேற்றினாலே கண்பேறடையும்படி யெதிராகக்கண்டு மருமகனாகியகட வுளை வணங்குப்பொருட்டு வருமுன்னே மாமனென்றுமுறைபால்தனது தா மரைபோன்ற கையையுடையதது பெண்கொடுத்தபாண்டியனை எதிராகத்தழு விக்கொண்டு திருவுள்ளமகிழ்ந்து கிருபையோடு பார்த்து உன்மாட்டன்புள் ள பத்தினியோடு கடலாடச் செல்கவென, மலயத்துவச பாண்டியனும் முப் பிறப்பிற் செய்த தவத்தாற்பெற்ற பெண்ணன்னம்போலு மீனாட்சி தேவியா னவள எதிரேவந்து தன்னைத்தழுவ, தானுந்தழுவி இமயபருவதராஜனைப் போலக் குறைவற்ற மகிழ்ச்சியை யடைந்து குளிர்ந்த தேன்போலுஞ் சொ ல்லையுடைய உனது திருக்கலியாணத்தைக்காணத் தவஞ்செய்தேனல்லனென் னுந் துக்கமுண்டாயிருந்தது. அது இந்தச்சந்தோஷமென்கிற தேனைவண் டைப்போலவுண்டு மறந்தேனென்றான்

அப்பொழுது நிறைந்த கற்பினையுடைய காஞ்சனமாலை தூரத்திற்செ ன்ற தன்னுபகன் சிலநாள்சென்று வரக்கண்டவள்போல நாணுற்று எதிராக வந்து வணங்கி மேகம்போன்ற அளகத்தையுடைய காஞ்சனமாலை பவித்திர த்தை யுடையவளாய் பஞ்சாட்சரத்தையோதி முனிவரது வேதநூற் சங்க ற்பவிதிப்படி தன்றுணைவனதுகையைத் தன்கையாற்பற்றிமனக்களிப்போடு எழுகடலினும் ஸ்நானஞ்செய்தாள் செய்து கரையேறிக் கொன்றைப்பூவை முடியிலேதரித்த பரமசிவனது கிருபாநோக்கம் பெற்று இனி தாய்மார்கள் கருப்பத்தில் தங்காதவண்ணம் உமைபாகரது அருட்படிவத்தை யடைந்தார் கள். அடைந்த மாத்திரத்தில் காளகண்டமும்-சதுர்ப்புயமும் - நெற்றிக் கண்ணும் பெற்று பூவுலகத்தார்கண்டு அதிசயிக்க விளங்கினான். அப்பொ ழுது ஆகாயத்தினின்றும் வழுக்கிவிழுந்த சூரியனைப்போல பரமசிவன் வா ழாநின்ற உலகத்தினின்றும் பூமியின்கண் ஒரு தெய்வவிமானம் இறங்கியிரு ந்தது. அந்தத் தெய்வவிமானம் வந்தவுடனே மும்மூர்த்தி ஸ்வரூபராகிய பரமசிவனதுபணியால் பாண்டியன் நங்கையோடும் தேவர்கள்தொழ விமான மீதேறினான். அக்காலத்தில் தேவர்கள் பூமாரி பொழிந்தார்கள் தேவதுந் துபி மேகம்போல முழங்கிற்று. அப்பொழுது விமானம் ஆகாயத்திலெழுந் தது. தேவதுந்துபிகள் ஒலித்தன. ஹராஹரவென்னுமொலி பெருகுமொலி த்தன, தொழுகின்ற தகைமையுடைய முனிவர்களைத்ததேவர்கள்வணங்க சிவந்து கைலாயத்தை நோக்கிச் செல்லுகின்ற அவ்விருவரும் முன்பு தனது பாண்டிய வுருவமாயிருந்தது உலகத்தை முறைபாகச் செங்கோல் கைக் கொண்டு பின்பு தன்னுருவத்தைத்தந்த மருமகனும் மகளாகிய தடாதகைப் பிராட்டியாரும் மீண்டு பொன்னாற்செய்த குடுமியையுடைய அரண்மனையிற் புகுந்து இருக்கக்கண்டார்கள். பழவினைபால் சரீரமுறைதப்பிப் பிறவியை யடைந்த மனிதர்போல் பழையவுருவமாறி உலகமாதாவாகிய அன்னையை மகளாகவும் பெற்ற அப்பனே மருமகனாகவும், யான் யாவருக்குஞ் செய்தற் கரிய தவந்தானென்ன செய்தேனென்றுசொல்லி கன்றைவிட்டுப்பிரிந்த பசு

வைப்போல ஐயனது சத்திக்கின்ற வீரகண்டாமணியொருந்திய திருவடியை விடாதுபற்றிப் பொருந்திய அன்பானதுபின்னின்று தள்ள மனத்தோடு இரண்டுகண்களூம் சென்று முட்டி அடிக்கடி திரும்பிப்பார்த்துக்கொண்டு மலையையொத்த இந்திரவிமானத்தைக் கும்பிட்டுக்கொண்டு செல்வாராயினார், புவலோகங்கடந்துபோய் புண்ணியருக் களவற்ற போகத்தைப் புசிப்பிக்கின்ற சுவலோகங்கடந்துபோய் மகாலோகம்-சனலோகம் கடந்து, அதற்குமேலுள்ள தவலோகங்கடந்து, சத்தியலோகங்கடந்து, தண்ணளிய துளபமாலையையுடையோனது நவலோகங்கடந்து, உலகங்களுக்கு நாயகமாகிய சிவலோகத்தையடைந்தார். பின்பு அங்கேகாப்பாகிய தடாதகை இறைவனாகிய அரசனை அடிவணங்கித் தன்னைப் பெற்றவர்களுக்கு மேலாம்பொருளினது வாழ்வையளித்த கிருபையினாலே மனத்தின்கண்ணடங்காத மகிழ்ச்சியானது வாய்கொள்ளாமற் புறப்படுவதென இரண்டு திருச்செவிக்கும் செங்குமுதத்திற் பொதிந்த தேந்தேனை நிறைவிப்பதுபோல பலமுறையால் துதிசெய்து வணங்கியென்று சொல்லத்தொடங்கினாள். அவ்வாறுதேவர்க்கும் மற்ற யாவர்க்கும் பாலைக்கரந்தளிக்கின்ற தேவர்களது நாட்டிலுள்ள புண்ணிய காமதேனுவின் இளங்கன்றுக்குக் குறைவேது? என்றினித்தாள் என்னைப்பெற்றதாய விரும்பியது ஒருகடலே இந்தயத்தின்கண் ஏழுகடலையும் வரவழைத்தாய் என்னைப் பெற்றவள் ஸ்நானஞ்செய்யும் பொருட்டு தேவருலகத்தில் இருந்த அவள் கணவனையும் அழைத்து உனது வடிவத்தைக் கொடுத்து மேலான மோக்ஷவுலகத்தையுந் தந்தாய். அன்றியும் பாண்டியனது மரபு அழிந்தொன்றும் பழியுண்டாகாமல் பொன்போலும் விளங்குகின்ற மலையைச்சூடிய முடியைத் தரித்தது செங்கோல் நடத்திவருகின்றாய், இனிமேலும் இந்நிலைமைக்கிடையூறு இல்லையென்றே னென்று தலைவியிடம்ப, கடவுள் தன்னிறைவியுட்கருத்தை மனதிற்கொண்டு மகிழ்ந்திருந்தனர்.

## மலையத்துவசனையழைத்த படலம்

முற்றிற்று.

---

சிவமயம்.

பதினோராவது

# உக்கிரபாண்டியன் திருவவதாரப்படலம்.

கலிநிலைத்துறை.

மன்னன்குலசேகரன்றிருமகன்மனைவி
தன்னொடுங்கடலாடியதகுதியீதந்தத்
தென்னவன்றனித்திருமகடிருவுளங்களிப்ப
உன்னருந்திரனுக்கிரனுதித்தவாருரைப்பாம்.

இதன்பொருள்.

அரசர்களுக்கரசனாகிய குலசேகர பாண்டியனுடைய சிறப்புப்பொருந்திய புத்திரனாகிய மலயத்துவச பாண்டியன் தன் மனைவியாகிய காஞ்சனமாலையோடும் கடலில் ஸ்நானஞ்செய்தசெய்தி இதுவாகும் இனி அந்தமலையத்துவச பாண்டியனுடைய ஒப்பில்லாத பெருஞ் செல்வமாகிய தடாதகைப்பிராட்டியார் திருவுள்ளங் களிப்படைய நினைத்தற்கரிய வெற்றிபொருந்திய உக்கிரகுமாரபாண்டியன் திருவவதாரஞ்செய்த திருவிளையாடலை சொல்லுகின்றோம்.

சந்திரசூடனாகிய சோமசுந்தரக்கடவுள் உலகத்தினிடத்து அளவில்லாத நாள் தன்னுடைய திருவடி நீழல்போல யாவருக்கும் குளிர்ச்சிபொருந்திய சந்திரன்போன்ற வெண்கொற்றக் குடையினால் நீழலைச்செய்து அருளோடு செங்கோல் நடாத்தி உள்ளே விளங்கு முயிர்தானாகி முறைசெய்து நடந்து வருநாளில் திருமாலும்-பிரமனும்-வேதமுதலிய சாஸ்திரங்களாலுங் காணுதற்கரியவனும் அன்பர்க் கெளியவனுமாக விருக்கும்பெருமை யாவர்க்குந் தெரிய மிகுந்த வன்பினைக்கொண்ட சிந்தையினையுடைய மலயத்துவச பாண்டியனுக்கும் அவன் மனைவியாகிய காஞ்சனமாலைக்கும் ஆசைக்குரிய மகளெனவுமையைத் தந்து அதற்குப் பொருந்தத்தானும் மருமகனாகி உலகமுழுதுந்தன் வெண்கொற்றக் குடைக்கீழடங்கியிருக்க முறைசெய்து மூன்றரசர்களுக்குள் சந்திரகுலமாகிய பாண்டியர் குடிபெருமையை யடையச் செய்ததுபோல இன்னும் பெறத்தக்கதாகிய ஓர் குறைவைத் தீர்க்கும்பொருட்டு ஒருகாரியத்தைச்செய்தலும், அக்காரியத்தைவிட்டுவிடுதலும், நினையாத வேறொருகாரியத்தைச் செய்தலுமாகிய இவற்றையுடையோனும் ஆதிமத்யாந்தரகிதனாகிய பரமசிவனது நன்மை-தீமை-விருப்பு-வெறுப்பு இவைகளை இயல்பாகவே யொழித்த மாயாவிலாசத்தின் றன்மையை யாவரெடுத்துச் சொல்லத்தக்கவர்கள். இவ்வித இந்திரஜாலவித்தை காட்டுவான்போல தன்னிடத்து அக்கினிக் கண்ணின்று முற்பவித்த வீரபத்திரக்கடவுளைக் கருப்பமடையாது அளவற்ற வுயிர்களையும் உலகத்தையும் பெற்றெடுத்த தாயாகிய சுந்தரவல்லி தன்னிடத்துத் தோன்றும்படி சிந்தித்தார். அப்பொழுது அவ்வீரபத்திரக்கடவுளினது வரவுக்கேற்பச் சேடியர்களும் மற்றவர்களும் அம்மையை வணங்கித் தாயேநின் உருவத்திற்குத் தக்கபடி கருவுருவனப்பு

சிறப்பும் மாதந்தோறுஞ் செய்யும் மனைவினையும் யாங்கள் காண ஆசையுமிகுதியுமுடையேம் என்றார்கள் தேவியவ்வாறேயாகி கரியமணிகளாகிய சிகரத்தையுடைய பொன்மலைபோலுந் தோற்றத்தினையுடைய கொங்கைகள் அமுதநிரப்பிய இரண்டுசெப்பினை யொத்ததாக அக்கொங்கைகளைச் சுமந்துதேய்ந்த மருங்குலு மொன்றென்றுதோன்ற அருள் முதிர்ந்தாற்போன்ற நாவினுக்கு இனிய சுவைகளையுடைய வுணவுகளை யுண்ணவேண்டுமென்னும் ஆசைமிக அவ்வாசையறிந்தகணங்கள் அம்மைவிரும்பிய போகபூமியமுதும், நாகலோக வமுதும், பொன்னகரமுழுதும், விருப்பமடங்கக் கொண்டுவந்துகொடுத்தார்கள் புண்ணியத்தையுடைய முனிவர்களும் வேதபாராயணராகிய பண்டிதர்களும் வந்து அரசனுக்குச் செய்யப் பொருந்திய சடங்குகளை அம்மதுரை மூதூர் கலியாண வெள்ளத்திலே மூழ்க மாதந்தோறுஞ் செய்விக்க அக்கன்னிநாடானது செய்தபுண்ணியத்தால் உண்டாகியபயனை அடையும் துறந்தவரது உள்ளத்திலுள்ள கலக்க நீங்கவும், சோமவாரமும், திருவாதிரை நட்சத்திரமும்செய்த சிவபூசையின்பயனை யடையவும் வியாழபகவானாகிய குருவந்து அழகாகக் கேந்திரமேறிநிற்குநல் லக்கினம்வாய்ப்ப நான்கு வேதங்களும் தாமேமுழங்க, தேவர்கள் மந்தார மலர்மாரிபொழிய திசைகள்தோறும் தேவமாதர்கள் நடனஞ்செய்ய, தேவதுந்துபியைந்தும் சத்திக்கத், துர்க்கையும்-இலக்குமியும் - நாமகளும் செருக்கடைய அந்தணர் மகிழ்ச்சிமிக, முனிவர்கள் வளர்க்கு முன்னர் மந்திரத்தையுடைய யாகாக்கினி தானே வலஞ்சுழித்தெழுந் தாரவாரித்தாட, அட்டதிக்கு யானைகளும் ஆதிசேடனும் பாரத்தினாலுண்டாகிய இளைப்புநீங்க, இந்திரன் மகமேருவாகிய தெய்வம்-வருணன் இவர்களுக் கிடதுதோள் துடிக்க, பரமசிவனும் உமையுங்கொண்ட கோலத்துக்கேற்பக் குழந்தையானது உதய சூரியனைப்போலவும், அக்காலத்துதித்த குமரவேளைப்போலவும், வேப்ப மாலையையுடைய பாண்டியன் செல்வ புத்திரியாகிய தடாதகைப் பிராட்டியாரிடத்திற் றோன்றியது தோன்றியவுடனே எம்பிராட்டி அப்பிள்ளையையெடுத்து உச்சிமோந்து மார்போடுதழுவித் தன்னாயகன் கையிற்கொடுத்து மீண்டு வாங்கித் தன் திருமுலைப் பாலாகிய வெள்ளத்தைக் குமுதம்போன்ற வாயில் விடுத்துண்பித்து, அவ்வாறு வளர்த்து வருங்காலத்தில் திருமாலும்-இந்திரனும்-பிரமனும் முதலிய தேவர்களும் முநிவர்களும்-மற்றவர்களும் தத்தம் பத்தினிகளோடும் அரசனரண்மனைக்கு வந்தார்கள். சேரனும் சோழனும் வடக்கின் கண்ணுள்ள அரசர்களும், குறுநில மன்னரும் தங்கள் சேனைகள்சூழ கடல்கள் பொங்கி வருவதுபோல் வந்தனர். அவர்கள் வந்து அரசனையும் - தேவியையும் முறைபால் வழுத்தி வாழ்த்தி மானையு மழுவையு நீத்த பாண்டியனும். தேவியுமாகிய இவர்களது திருமுகக் கருணை பெற்று அவர்களது திருவடியை வணங்கித் தம்மூர்செல்லும் அவர்களிற் சிலர் பாண்டியர்களுக்கெல்லாம் பெருமானாகிய சோமசுந்தரப் பாண்டியரிடத்துக் கந்தனே வந்தானென்பார்கள், சிலர் குற்றமற்ற கற்பினையுடையாளது பாக்கியமென்பார்கள், சிலர் இவனது அழகினால் மன்மதனும் பெண்மையை விரும்புவானென்பார்கள். சிலர் இவன் செங்கோலினது ஆக்ஞை எழு

கடலாற்சூழப்பட்ட இவ்வுலகமாத்திரமோ, ஏழுலகத்தையுங் காக்குமென்பார்கள், சிலர் இக்குழந்தையினதுதோற்றம் மனிதர்கள்செய்ததவமோ அன்றித் தென் தேசத்தி லுள்ளவர்கள் செய்ததவமோ, அன்றித் தேவர்கள் செய்ததவமோ அன்றி யாகங்களுக்குரிய பூசுரர்கள் செய்ததவமோ அன்றிக் கேள்வியுடைய முனிவர்கள் செய்ததவமோ என்பார்கள். இவ்வாருகத் தம்மி லொருவருக் கொருவர் வினவி மிகுந்த மகிழ்ச்சியோடு சென்றுர்கள். அந்நகரத்தில் அவ்வவர்கள் வீடுகள் தோறும் பெண்கள் கலியாணத்துக்கு அலங்கரித்துக்கொள்ளும் ஆபரணங்களைத் தரித்துக்கொண்டு மங்கலவாத்தியங்கள் ஆரவாரிக்க பட்டணமெங்கும் பொங்கியோடும்படி நெய்விழா வெடுப்ப கேள்வி நிரம்பிய மறையோர்க்குக்கொடுத்த தானவெள்ளம் கடலைக்கிழித்துக்கொண்டுசென்றது இன்னும் அத்தான வெள்ளமானது இறைத்த வாசனைச் சுண்ணங்களையும், பொரிகளையும், வெள்ளையரிசியையும், குப்பைகளையும், நீர்ச் சிவிறிகளா லிறைத்த குளிர்ந்த பனிநீரையும், சந்தனத்தையும், எண்ணெயையும், கஸ்தூரிசேற்றையும், பசையில்லாமல் வாரியெடுத்து இடமகன்ற பட்டினமெங்கும் கழுவின.

இவ்வாறு அந்நகரமெங்குங் களிக்கச் சோமவாரம் திருவாதிரை நட்சத்திரம் ஆகிய இந்த நல்லநாளில் குருகேந்திரத்தில் பரிசுத்தமாகிய லக்கினத்தில் பிறந்த சோமசுந்தர பாண்டியனது பிள்ளைக்குச் சாதகர்மமுதலிய அரசர்க்குரிய வேத ஒழுங்கின்படிசெய்வித்து, வருணன்-இந்திரன்-மகமேருவாகிய மலையரசன்முதலிய சத்துருக்களது வீரஞ்சிந்த, அவர்களது செருக்கையழித்து அச்சந்தோற்றுவித்தற்குறிய காரணத்தால் அக்குமானுக்கு உக்கிரவருமனென்று நாமகரணஞ்செய்து நான்காமாதத்தில் சந்திமிதிப்பித்து ஆறுமாதத்தில் அன்னமங்கலம்பயிற்றுவித்துப் பதின்மூன்றுமதியில் சௌளவினைமுடிப்பித்து ஐந்தாமாண்டில் நூலினதுமுறைதெரிந்து பூணுநூற்கலியாணஞ்செய்வித்துப் பின்னர் பதநிரை பாழிச்சாகை என்னு முறுப்பினையுடைய பெரியவேதங்களையும் சாஸ்திரங்களையும் தநுர்வேதமும் வாள்வித்தையும் யானையேற்றம் குதிரையேற்றம் மற்றவையும் பிரகஸ்பதிபகவான்வந்து கற்பித்தார் குருமுகத் தறியவேண்டுமென்னும் கொள்கையால் ஒருமுறைகேட்டு அறுபத்துநான்கு கலைஞானங்களும் ஒருமிக்கத்தெளிந்து பரமசிவனல்லது மற்றொருவராலும் அறிவித்தற்குக்கூடாததலால் பாசுபதாஸ்திரத்தை பரமசிவனிடத்திற்றெரிந்துகொண்டான். அளவில்லாத கலைகளையெல்லாம் எட்டாமாண்டிற் கற்று மிக்கறிவுடையோனுகிக் குரவரைத் தொழுது போற்றவல்லவனுகி அவர்கள் மகிழ்ச்சியோடும் அணிந்துகொள்ளத்தக்க ஆபரணமாகி வெற்றி செல்வத்தையுடைய இடபத்தை யொத்த இளைஞர்களோடு திருவிளையாடல் செய்வானுகிப் புகர்முகத்தினையுடைய மதத்த யானைகளையொன்றோ டொன்று தலையால் முட்டிப் போர்செய்து வென்றும், ஆட்டுக்கடாக்களோடு ஆட்டுக்கடாக்களைச் சண்டைக்குவிட்டும் போர்செய்துவென்றும், வகிர்தலைப்பொருந்திய உச்சிக் கொண்டையையுடைய கோழிச் சேவல்களையொன்றோடு ஒன்றைப்போர்செய்யவிட்டு வென்றும், காற்றினும் கடிய வேகத்தையுடைய குதிரைமீதேறிப் பலகாதம்போய்த் திரும்பியும், எமனை

ப்பார்க்கினுங் கொடிய சீற்றத்தையுடைய யானைமீதேறிச் செலுத்தியும், வையை யாற்றினும் சோலைகளினும் தடாகங்களினும் சென்று விளையாடி யின்பத்தை யனுபவித்தும், வேல்வல்லமையையு முடைய பாலியர்களோடு மல்ல யுத்தஞ்செய்து வென்றும், பொதியமலையிற்சென்று வேட்டையாடியும், அம்மலையிலுள்ள முனிவர்கள் ஆசீர்வாதஞ்சொல்ல, அவர்கள் க்ஷேமங்களை வினவியும், அவர்கள்கொடுத்த கனிமுதலிய விருந்துகளைக் கையிற்பெற்றுச் சந்தோஷித்து மீண்டும் இவ்விதமாகப் பதினைந்தாண்டுகழிய, பதினாறுமாண்டில் சூரபதுமனைச்சயித்த தங்கள் கடவுளே யிவனென்று கருதி வில்லையுங் கூரியவேலையுங் கைவிடாமற் காப்பதுபோல் கச்சணிந்த ஸ்தனங்களையுடைய மாதரும் அவர்களது மாவடுபோன்ற கண்களும் தன்னிடத்து மொய்க்க, கூரிய நுனியையுடைய வேலாயுதத்தையுடைய உக்கிரவர்மன் இத்தன்மைய னாகத் தாதையாகிய சோமசுந்தர பாண்டியன் குமாரனுடைய தாமரை மலர்போன்ற அழகினை யுடையதாகிப் பார்ப்பவரது கண்களையும், மனங்களையும் கிரகிக்கத்தக்க காந்தியினையும் உடையனவாகி இலக்கண நூற் சொல்லியபடி திரண்டு நீண்ட கணைக்காலினையும், வட்டந் தோன்றுமற் செழுமையான முழந்தாளிணையும், தொங்குகின்ற வாயினையும் சாம்பொருந்திய கதுப்பினையும் உடைய பெரிய யானையினது துதிக்கையை யொத்த திரண்ட துடைகளையும், குறுகியவயிற்றையும், தாழ்ந்த நாபியையும், செவ்விதாய் அழகுவாய்ந்த குற்றமற்ற கண்ணாடிக்கொப்பான வாசனைபொருந்திய அகன்ற மலையைப்போலும் அழகினையுடையமார்பையும், வீணைத்தண்டுபோல இணைபொத்து நீண்டு தாழ்ந்தகைகளையும், மணம்பொருந்திய மலர்மாலை கிடந்தசையாநின்ற இரண்டு மேருவையொத்த தோள்களையும், வலம்புரிச் சங்கத்தை யொத்த கண்டத்தையும், இலக்குமிதங்கிய பொற்றாமரை மலர் போன்ற முகத்தையும், பொதுவாகப்பார்த்துப் பூமிதேவிசெய்த தவப்பேற்றையொத்தவனது உருவத்தையெல்லாம் நின்று நின்று உருவத்தின் அழகினது நலத்தைச் சொல்லாநின்ற நூலளவையால் சோதிக்கத்தொடங்கி அவயவவுருப்புக்களுள் உன்னதவுருப்பாறு, நீண்டவுறுப்பைந்து, சூக்குமவுருப்பு ஐந்து, குறுக்கவுருப்பு நான்கு, அகலவுருப்பு இரண்டு, சிவந்தவுருப்பு ஏழு, ஆழ்ந்தவுருப்பு மூன்று இவை யவ்விலக்கணத்திற் றெருகுத்திருக்கின்றன. இவைகளை விரித்துரைப்பின் முப்பத்திரண்டு இலக்கண வுருப்புக்களாம். அவையாவன வயிறு-தோள்-நெற்றி-நாசி-மார்பு-கையடி -இவையாறும் உயர்ந்திருப்பின் அவனிந்திரனுவன். ஒளியைகிரகிக்கின்ற-கண்-கபோலம்-செங்கை-நாசி-முலை-நடுமார்பு இவ்வைந்தும் நீண்டிருக்குமாயின் நன்மையுண்டாகும். குஞ்சி-தொக்கு-விரற்கணு-நகம்-பல்-இவ்வைந்தும் சிறியதாயிருப்பின் ஆயுள்விருத்தி. கோசம்-கணைக்கால்-நா-முதுகு-இந்த நான்கும் குறுகியிருக்குமாயின் செல்வப்பெருக்காம். சிரம்-நெற்றி-இவ்விரண்டும் அகன்றிருக்குமாயின் இதுவும் நன்றாகும். உள்ளங்கால்-உள்ளங்கை-கண்கள்-இதழ்க்கடை-அண்ணம்-நா-நகம் இவையேழும் சிவந்திருப்பின் மிகுந்த வின்பமுண்டாகும். இகல்வலி-ஓசை-நாபி-என்றுசொல்லுகின்ற இவைமூன்றும் ஆழ்ந்திருப்பின் எவர்க்குமேலான நன்மையுண்டாகுமென்று சோமசுந்தரம்மைந்த

னது அழகுநிறைந்த இலக்கணத்தோடு நல்லகுணத்தையும் நோக்கி இவ் வுலகத்தை பொதுநீக்கியாள வல்லவனுகி வாழுநாளில் மிகவும் வல்லவனுவ னென்று தன்மனத்திலாய்ந்து இத்தகுதியான குணமிருந்ததன்மையால் கீர் த்தி நீதி நல்லவுள்ளம்-உண்மை-பெருமை - தெய்வபக்தி - உலகுக்கெல்லாம் சந்தோஷத்தை உண்டுபண்ணுங்குணம்-சாந்தம்-உயிர்களிடத்தன்பு - ஈகை- கல்வி-ஜயித்தற்கரியாரைச் சயித்தல், தேவர்களாலுஞ் செல்லுதற் கரிய தேயத்திலும்சென்று அவர்களாலிடப்பட்டதிரையைக்கோடலும், சுமத்த ற்கரிய வுலகத்தை மலைபோலப புயற்ருற் ருங்குதலும், சொல்லுதற்கரிய கீர்த்தி உலகெலாஞ் சுமப்பவைத்தலும் என்றுசொல்லப்பட்ட விவை முத லான வியற்கைக் குணமுடையவனுகி நன்றிசெய் துலகுக்கெல்லாம் தாஞெ ருவனேநாயகனுகி நிற்கத்தக்க இப்பிள்ளைக்குப்பின்பு பட்டாபிஷேகஞ்செய் வோம், முன்பு திருமணஞ்செய்யவேண்டுமென்று மந்திரிகளோடு ஆலோசிக் கத் தொடங்கினுர்.

## உக்கிரபாண்டியன் திருவவதாரப்படலம்

முற்றிற்று.

---

சிவமயம்.

பன்னிரண்டாவது

# உக்கிரகுமாரனுக்கு வேல்வளை செண்டு கொடுத்த படலம்.



அறுசீரடியாசிரிய விருத்தம்.

உருக்குந்திறலுக்கிரகுமாரனுதயமிதுவான்மதியுநதிப்
பெருக்குங்காந்தசடைக்கற்றைப்பெருந்தேர்ச்செழியர்பிரானவற்குச
செருக்குஞ்செல்வமணமுடித்துச்செவ்வேல்வளைசெண்டளித்துள்ளந்
தருக்குமுடிதந்தரசுரிமைதந்தசெயலுஞ்சாற்றுவாம்.

இதன்பொருள்.

பகைவரைக் கெடுக்கும் வலிமைபொருந்திய உக்கிரகுமாரபாண்டியன் திருவவதாரஞ்செய்த வரலாறு இதுவாகும். இனி வெள்ளியசந்திரனையும் கங்கைநதிப்பெருக்கையும் நெருங்கியசடையும், ஒளிந்துவந்தருளிய பெரிய தேரையுடைய சௌந்தரபாண்டியன் அந்த உக்கிரகுமாரபாண்டியனுக்குச்செல்வந்தா லிருமாந்திருக்கும் திருமணத்தை முன்னர் முடித்துப் பின்புபகைவருதிரந்தோய்ந்தவேலையும், சக்கரத்தையும், செண்டையுங்கொடுத்து மனத்திலிருமாப்பைத் தாத்தக்க திருமுடிதரித்துந் தமதரசுரிமையுந் தந்தருளிய திருவிளையாடலைச் சொல்லுகின்றோம்.

சோமசுந்தர பாண்டியனனவர் தனதருமைப் புத்திரனுக்குத் திருக்கலியாணஞ்செய்ய அறிஞர்களோடும் மந்திரிகளோடுஞ்சூழ்ந்து குற்றமற்ற அழியாத செல்வமும்-குலமும்-குடியும்-புகழும்-நமதையனுக்கிசைந்த குலத்தரசர்யாவரென்று ஆய்ந்து சொல்லுகின்றார். இனியபுனலாற் சூழப்பட்ட வடபுலத்தில் மணவூரென்னுந் திருநகரத்திற்கு வேந்தனுகியசூரிய குலத்திற் பிறந்த சோமசேகரனென்று சொல்லுகின்ற கேள்வியையுடைய அரசனிடத்து இலக்குமியைப்போல் அவதரித்த காந்திமதியென்னுங் கன்னிகையைத் திருமணம் பேசவேண்டுமென்று சொல்லியிருந்தார்.

அன்றிராத்திரி வெள்ளையானையின்பிடரியாற் சுமக்கப்பட்ட சிகரத்தையுடைய ஆலயத்திலெழுந்தருளிய சந்திரனைத்தரித்தசடையினையுடைய பெருமானனவர் சூரியகுலவரசனுகிய கைமாறுகருதாது கொடுக்கும் கையினையுடைய சோமசேகரனுடைய கனவில் எழுந்தருளிவந்து தேவர்களது கனவிற்கு மெட்டாத திருமேனியைக் காட்டி அன்னப்பக்ஷிகள் தங்கிய வயலாற் சூழப்பட்டமதுரையிலெழுந்தருளிய சிவன்யாம் நீயீன்றபொன்னையனையாளை மதுராபுரியிற்கொண்டுபோய் மறுபட்டணத்தரசர்களது மணிமகுடமிடறித்தேய்ந்த வீரகண்டாமணியையுடைய சுந்தரபாண்டியனுடையகுமாரனுக்குக்கொடுப்பாயென்றுசொல்லி மீண்டார். உடனே அரசன் மனத்தா

மரையும் முகத்தாமரையுமலர்ந்து இரண்டுகண்களையுந் திறந்து எழுந்து இரண்டுகையையுங் கூப்பிப் பரமசிவன் கருணையால் எளிதாகவந்த செயலை நினைத்து அன்பின்வெள்ளத்தில் மூழ்கிச் சூரியோதயகாலத்தில் நித்தியகர்மங்களை முடித்துக் கொண்டு மந்திரிமார்களோடு நான்குவிதச் சேனைகளுஞ் சூழ, பலவாத்தியங்களுமொலிப்ப தனது திருமகளைச் சேடியர்களோடுதேரிலேற்றி மணக்கோலத்தோடு மதுராபுரியை நோக்கிப் புறப்பட்டு வருங்காலையில் சந்திரகுலவரசனாகிய பாண்டியன் சுற்றத்தாரும் மந்திரிகளும், நேற்று மணத்தைக் குறித்துப்பேச ஆலோசித்தபடியே மணவூர் நோக்கிவரும் வழியில் சோமசேகரவரசனையுஞ் சேனைகளையுங்கண்டு எம்முடைய தென்னர் பெருமான் குமாரனுக்கு உமது திருவைத் தரக்கடவீரென்றுகேட்க அவ்வரசன் கொன்றைமாலையையுடைய பரமசிவன் தன் கனவின்கண் எழுந்தருளி வந்தகுலனும் குடியும் உரைத்தநன்மையை அவர்களுக்குரைத்துக் கலியாணதற்குச் சம்மதித்துரைக்க அதனை அங்ஙனமிருந்த முதியோர் அறிவுடைய உழையர்களைவிடுத்துச் சோமசுந்தரபாண்டியருக் கறிவித்து மணவூரினின்றும்வந்த சோமசேகர அரசனோடு மதுரைப்பதியைவந்து சேர்ந்தார்கள் சூரியகுலத்தரசனாகிய சோமசேகரன் சந்திரகுலத்தரசனாகிய சோமசுந்தர பாண்டியனை யெதிரேசென்றுவணங்க அவனைத்தழுவி உபசாரஞ்சொல்லி விடுதியிற்செல்ல அனுப்பிப் பாண்டியனிருந்தனன். அதற்குமேல் அமைச்சர்கள் ஐம்பத்தாறுதேசத்தரசர்களுக்கும் திருமுகங்களனுப்பிப் பட்டணத்திலுள்ளார்க்குக் கலியாணநாளை அறிவித்து நகரத்தையலங்காரஞ்செய்யும்படி மணமுரசாலறிவித்தார் பட்டணத்திலுள்ளார் மாடங்களைப்புதுக்கிக் கமுகமரங்களையும் வாழைமரங்களையும் வீதிகளெங்கும் நீளநிரைத்துப் பாலிகைகளும் நிறைகுடங்களும் வரிசைவரிசையாகநிறுத்தி அசைகின்றகொடிகளுங் கட்டி அழகுக்கழகுசெய்ததுபோல மாடங்கள்நெருங்கிய நகரத்தை மணக்கோலம்பெருகச் செய்வித்தார்கள் தென்றலுடன் றிருமகளைத் தேவர்பெருமான்மணஞ்செய்யக் கலியாணவழகாக ஒருநகரம் இதற்கொப்பும் அதிகமுமில்லாதவண்ணம் அன்று அழகுசெய்தார்கள். இன்றுதானே தனக்கதிகமென்றுசொல்லும்படி அழகுசெய்தார்கள் மாலையையுந் திருமுடியுந்தரித்த சோமசுந்தரபாண்டியரது கலியாணதிருமுகத்தைசேரனும்சோழனும்மற்ற ஐம்பத்தாறு தேசத்தரசர்களும் குறுநிலமன்னர் முதலியவர்களும் இரதகஜதுரக பதாதிகளோடு தங்கள்தங்கள் பட்டணங்களினின்றும் புறப்பட்டுச் சேனைகளாலுண்டாகும் தூளிப்படலமானது திக்குகளடங்கநிறைந்து கடலைமேடாக்கவும்பலவாத்தியங்களும்கடலொலிபோலவொலிக்கவும்வந்து நெருங்கினார்கள் ஏகதண்டந் திரிதண்டத்தையுடைய சந்நியாசிகள் விருப்பத்தோடும் வந்தார்கள் வானப்பிரஸ்தஆசிரமத்தையுடைய வானப்பிரஸ்தமுநிவர்கள் தங்கள்தங்கள் பத்தினிகளோடும் வந்தனர் இந்திரன் பிரமன் திருமால்மற்றதேவர்கள் பதினெண்கணத்தர் யாவரும் வந்தனர் இவ்வாறு யாவரும்வந்து அரண்மனையிற் புகுந்து சிங்காதனத்திலெழுந்தருளித் தடாதகைப்பிராட்டியாரோடும்கொலுவிருக்கின்றகோலத்தைக்கண்டுதுதித்து வணங்கவேண்டிய முறைப்படிவணங்கி வாழ்த்தினார்கள் சோமசுந்தரபாண்டியர் அவர்களுக்கு மு

றைப்படி சன்மானஞ்செய்து இருந்தவர் இனிய பாண்டியன் திருமகளது திருக்கலியாணச் செய்தியைச் சொல்லத்தொடங்குவாம்.

சோமசேகரன் பெண்ணினுடைய அழகையெல்லாம் இராஜன்கண்டு சந்தோஷிக்கும் கொள்கையைக்கண்டு சொல்லவல்லவன் அங்குள்ள யாவருக்கும் அப்பெண்ணினது அவயவ விலக்கணத்தை நூன்முறைப்படி சொல்லத் தொடங்கி மிகவும் நீண்டு குறுகாதனவாகிப் பிளவுபடாத கடையிளை யுடையனவாகித் தழைந்துச் சுற்கொண்ட மேகம் வண்டின்கணம் என்று சொல்லும்படியாகக் கறுத்துக் கடைகுழைவாகி இயற்கை மணம்வீசிக் குற்றமற நெருங்கி நெறிந்து மெல்லென்று கண்டவர்களது உள்ளத்தையும் கண்களையும் கிரகிக்கத் தக்கதாய்நெய்த்து இருண்ட வாசனை பொருந்திய மலர்களைத்தரிக்க அளகத்தை யுடையவள் தன்னுபகனுக்கு இனிய வளப்பம்பொருந்திய செல்வமுண்டாகும் மதத்தையுடைய யானையினது மத்தகம்போலத் திரண்டுபேர்ந்த சென்னியையுடையாள் அவளது உள்ளத்தை மகிழ்விக்கும் கணவன் ஆயுள்நீண்டு உலகத்தை யெல்லாம் அரசுசெய்ய வுரியவனுனவன், எட்டாநாளுதிக்கின்ற குளிர்ந்த சந்திரன்போல மயிர்நரம்பகன்றுதசைந்து மூன்று விரலளவு அகன்ற விளக்கமாகிய நெற்றியை யுடையாள் தன்கணவனுக்கு நல்ல செல்வத்தோடு அழியாத ஆரோக்கியமுமுண்டாம் கண்ணின் கடைசிவந்து பசுவின் பாலைப்போல வெளுத்து நடுவிழி மிகவுங் கறுத்து அழகடைந்து இளமை யுடையதாகி இமைகருமயிரை யுடையதாகி யிருப்பினன்றி. கரிய புருவமானது வளைத்த வில்லையொத்ததாகி தம்மிலிரண்டு மொத்து இருந்தால் நன்று நாசியானது இருதுளையும் அழகுகொள்ள உருண்டு எள்ளின் மலரானது தாமரை மலரின்மேல் பூத்ததுபோல் இருந்தால் நன்று வள்ளைக் கொடிபோல நீண்டு தாழ்ந்து இரண்டு செவியும் சுழி நல்லவாகி முன்னர் தள்ளியிருப்பின் மனோகரமாந் தன்மையால் நன்மையுண்டாகும். விளக்கமாகிய கபோலம் வட்டமாகித் தசையையுடையதாய் உயர்ந்து கண்ணுடி மண்டலம்போலத் தெளிவான ஒற்றமுடையது நன்றென்று சொன்னன். பின்னும் கொவ்வைக்கனி போன்ற இதழானது திரண்டு இருபக்கமுங்குவிந்து சிவந்து ரேகையொழுங்காக விருந்தால் அம்மாது தன் நாயகனுக்கு என்றும் நண்புருவாக விருப்பள் முப்பத்திரண்டென்னு மெண்ணையுடையதாகி வெளுத்த பற்களானவை இடைவெளியில்லாததாகி நீண்டுமேலுங்கீழும் இரண்டுவரிசையும் செவ்வியதாக வளர்ந்து பசுவின்பாலைப்போல வெளுத்து விளங்கில்நன்றென்பர். நூல்களையாய்ந்தோர் மெல்லியதாய்ச் சிவந்துகோமளமான நாவினால் இச்சித்த நித்தித்தபடியே விரைவில்வந்து பொருத்தநுகருவள் தசைபெற்று வட்டமாய் இரண்டங்குல வளவினை யுடையதாகிய அழகானமோவாய் இருப்பின் நன்றென்பர் அகவிதழையுடைய தாமரைபோல மணமுடையதாகி யிருடீர்ந்து விளங்காநின்ற சந்திரனை பொத்த முகம்நன்று, சங்குபோன்ற கழுத்தசைபெற்றுநாலுவிரலி னளவதாகித் திரண்டுமூன்றிரேகைவரை யுண்டாயிருந்தால் அவள் கணவன் உலகத்தரசனுவன், மார்பினிடத் தசையப்பெற்றுப் பதினெட்டு விரலள வகன்று மயிர் நிரம்பகன்று மிதந்திருந்தால் சிறப்பாம். மூங்கிலை யொத்த தோளானது

தசைப்பிடியாய் மயிரில்லாமல் எலும்பு தோன்றாமல் இளமையான மொழி யையுடையதானால் நன்மையாம், செங்கையானது நீருண்டு உருண்டு கணுக் கள்பெற்று அடைவாகச் சிறுத்து இருப்பின் செல்வமோ டின்பமுமுண்டாம், வளவிய நகமானது சிவந்து உருண்டு பார்ப்பவர் கண்களையும் மனத்தையுங் கிரகிப்பதாய் சரசரப்பின்றியிருப்பின் அவைநல்லவாம், உள்ளங்கையானது மிருதுவாகிச் சிவந்து இடைவெளி யகன்று நடுவிரலுயர்ந்து மங்கலமாகிச் சிலவரைகளில் நல்ல விலக்கண வரையிருந்தால் நன்மையாம் முத்துமாலைக ளணிந்த தனங்கள் கடினமாகித் தசைபெற்று வட்டமாய் அரும்பையொத்த தாகிய இரண்டுமொத்து இருமாந்து ஈர்க்கு இடையில் நுழையப் பெறாது நெருக்கியுள்ளன நன்றாம், வாடி உரோமவரிசை பெற்றுப் பக்கத்தில் மயிர் நரம்பகன்ற வயிற்றை யுடையாள் உணவை விரும்பியபடி அனுபவிப்பவள் நாபியானது வலஞ்சுழிபெற்று ஆழ்ந்திருப்பின் அழியாதசெல்வமிகும்இடை யில் மயிர் நரம்பற்று இருபத்துநான்குவிரலளவாகி வட்டவடிவதாய்ச் சிறு கிமெலிவதாய் மத்தகம் ஆமையின் முதுகுபோல உருவமிரண்டும் நேரொத் திருந்தால் நிதமபம் நன்றாம், இரண்டு துடையும் மயிரென்பகன்று யானைத் துதிக்கையும்-கரபமும்-வாழைத்தண்டும்-ஒத்திருக்கின் நன்மையென்றுசொ ல்லுவர், முழந்தாளானது அங்கமுண் மறைந்து வட்டமாய்த் தசையை யுடையதாய் இருப்பதுநன்று, கணைக்காலானது மயிர் நரம்பு தோன்றாது இரண்டுஞ் சமமாக வுருண்டு சிறுத்து அழகடைந்திருப்பின் நன்மையாம், புறவடியானது நரம்பு என்பு தோற்றாமல் தசைபெற்று ஆமை முதுகுபோ லத் திரண்டுயர்ந்து அழகுடையதாய் மஙகல கரமாக விருப்பின் அம்மடந் தை அரசன் மனைவியாம், தாமரை மலர்போன்ற காலின்விர லுயர்ந்து பரி சுத்தமாய் அழகினை யுடையனவாய் கழுநீர் மலரினது மெல்லிய விதழ் களை நிறைத்து வைத்தாற்போல ஒழுங்காகத் திரண்டு வெண்மையாகிய நக மானது வெண்மதிபபிளவு பொருந்தியன போன்று மிருதுவாகி குற்றமறத் தசைந்தனவா யிருப்பின் உத்தமமாம், உள்ளங்காலானது தசைப்பிடிப்பும்- மிருதுவும்-சமமானால் நன்றாம் அழகான தளிர்போலச் சிவந்து பிரகாசிக்கி ன்ற பொன்னைப்போல எப்பொழுதும் வியர்வையற்று மேனி அழகாகவிருப் பின்செல்வமுண்டாகும். தேகமணம்பாதிரி-குவளை-தாமரை-மல்லிகை-சண் பகம்போன்றிருப்பின் நலமாம், சொற்கள்-குயில்-கிளி-யாழ்போன்றிருப்பின் பாக்கியமுண்டாகும் என்று கரிபகேசமுதல் பாதம்வரையில் மருங்குல்தோ ன்றாத கன்னிகையின் அவயவங்க ளெல்லாவற்றையும் வாக்கின்செல்வன்று லறிவால் ஒருங்குதேர்ந்து இவ்வுலகமன்றி தேவலோகத்திலும் இக்குயிலை யொத்த கன்னிகையினது அவயவிலக்கணம்போலக் காணுதலரிதென்றான்.

அவ்விடத்து அதைக்கேட்டோர் யாவரும் உள்ளத்தில்சந்தோஷமதி கரிக்க அதன்பின்பு வாசனைமிகுந்த மலர்மாலையைத்தரித்த மயிர்முடியினையு டைய உக்கிரகுமாரன் வந்து மதத்தயானையினது பிடரியிற் சுமந்து வந்த வையையினது மேலான தீர்த்தத்தா லபிஷேகஞ் செய்யப்பட்டு அலங்கார மண்டபத்திற் சென்று புதுமலர்களைத் தரித்துக் கஸ்தூரி முதலிய வாசனை கலந்த சந்தனக்குழம்புபூசி முத்துகளாற்செய்தமாட்சிமைபொருந்திய ஆப

ரணங்களைத் தேகமுழுதுந்தாங்கி விளங்காநின்ற சோடசகலையோடுங் கூடிய சந்திரன்போல்வந்து மணத்தவிசின்மேல் பலவாத்தியங்கள் முழங்க விருந்தனன், அவ்வண்ணமாகவே ஸ்நானஞ்செய்து அரியவாபரண முதலியவற்றை யலங்காரஞ்செய்த கன்னிகையைக் கொண்டுவந்து நம்பியினது வலதுபக்கத்தில் அழகுபெற விருத்திவைத்தார்கள் சோமசேகர விராஜன் தன்பத்தினியோடு மெழுந்து இவ்விருவரையும் பரமசிவனு முமையுமாகப் பாவித்துக் கையில் நீர் நிரம்பிய கரகத்தைக் கொண்டு அம்மங்கலநீரால் நம்பினதுமலரடியைவிளக்கி மலர்மாலைதரித்து அமுதூட்டிப் பின்பு தன்பெண்ணாகிய காந்திமதியின் கையைப்பற்றி நம்பியின் கையின்மேல் வைத்து தேவர்களறிய நல்லநீரைவிட்டு மந்திரஞ்சொல்லி சூரியகுலவரசனாகிய சோமசேகரன் சந்திரகுலத்தை விளக்கவந்த சோமசுந்தரபாண்டியன் குமாரனாகிய உக்கிரவருமனுக்கு இன்று என்குமாரியாகிய காந்திமதியைக் கொடுத்தேனென்று தத்தமபண்ணிக் கொடுத்துப் பலம்பொருந்திய சிங்கத்தாற் சுமக்கப்பட்டதிண்ணிய சாலையுடைய இரததினவடங்கள் மாட்டிய வயிரவூசலைந்தும் நன்றாகப் பதஞ்செய்த பஞ்சணையோடு அன்னத்தின் மிருதுவான இறகுபெய்த அணை பத்தும், பவளவாயும்-பசும்பொன்மேனியும்-இந்திரநீலரத்தினத்தாலமைத்த கண்களும் உடைய பாவைவிளக்கு எட்டும்-சமையதிடத்துக்குதவும் பாத்திரங்கள் நூறும்-அழகிய பொன்னினாலும் மணியினாலுஞ் செய்தகாளாஞ்சி ஏழு, பொற்கவரிஎட்டு, கிரணங்களையுமிழ்ந்துபிரகாசிக்காநின்ற பசும்பொன்னாற்செய்த கிண்ணவரிசைகள் சுற்றிலும் விளங்க மத்தியில்நட்ட பொற்காலினோடு பிரகாசிக்கின்ற இரத்தினப்பாத்திரங்கள் நூறும் விலையுயர்ந்தமுத்தாரத்தோடு பெட்டி ஆயிரமும அரியவிலையுடையமெல்லியவஸ்திரங்களும் பட்டுகளும் வைத்திருக்கும் பெட்டிகள் முந்நூறும், அமுதத்தாலே உருவமெழுதிய பிரதிமையை யொத்த மாதர்கள் ஆபரணங்களோடு எழுநூற்றைவரும் மூன்றுவூரும், இரண்டுகோடிசெம்பொன்னும் மகட்குவரிசைகொடுத்தனன்.

அப்பொழுது பலவாத்தியங்களு மாரவாரித்தன, தேவர்கள்மந்தார மலர்மாரி தூர்த்தனர் ஓமாக்கினிதுள்ளி வலமாகச்சுழித்து ஓங்கின, மங்கையர்கள் வாழ்த்துப்பாடினர், அம்மணத்தைக் கண்டவர்கள் கண்கள் பெறும் பேற்றைப் பெற்றன, முருக்குடைந்த கடப்பமலர் மாலையையணிந்த புயத்தினையுடைய இளங்காளைக் கொப்பாகிய உக்கிரவர்மன் முனிவர்கள் ஓமகாரியஞ்செய்ய இனியவாத்தியங்கள் முழங்கக் காந்திமதிக்கு மாங்கல்ய தாரணந் தரித்து அப்பெண்ணினது வளையல்பொருந்திய செங்கையைப்பற்றி வேதவிதிப்படி மற்றகல்யாண சடங்குகளையெல்லாம் பூரணமாக நிறைவேற்றிஅளவுபடாத வளப்பத்தோடு சூரியகுலவரசனாகிய சோமசேகரன் குமாரத்தியை வேதவிதிவிளங்கத் திருமணமுடித்துச் சந்திரனும்நக்ஷத்திரக் கூட்டங்களும் தவழ்ந்து செல்லும்படியான ஆகாயத்தையளாவிய இரத்தின மாடங்களையுடைய வீதியில் வலமாகவுலாவவருங்காலத்து மின்னலுக்கொப்பாகியபொற்றொடியை யுடையவர்களும், செம்பஞ்சூட்டிய மெல்லிய அடியினரும், இரத்தினாபரணங்களையுடையமுலையினரும், சத்திக்கின்ற இரததினமேகலையுடையவரும், மலர்மாலையணிந்த கூந்தலையுடையவரும், ஆகிய தாமரையரும்பை

யொத்தமுலைகளையுடைய மங்கையர்களுடைய கண்களும், மனமும் அவரிடத்துத் தூதுநடக்க, நடந்து செல்லுகின்ற சுருங்கிய விடையை யுடையராகித் தனதுபவனியைத் தொழுதுவருவார்க்கு உக்கிரகுமாரனிங்கு அவர்களது மருங்குலினது பாரத்தை நீக்குகின்றவன்போல் கலையைக்கவர்ந்தும், தோளினதுபாரத்தைக் கழிப்பவன்போல் வளையைக்கவர்ந்தும்; மனத்தினைருங்கிய பாரத்தைக் கழிப்பவன்போல நிறையக் கவர்ந்துசென்றான். அவ்வாறு செல்லுங்கால் கண்டவர்கள் சந்திரனையணிந்த முடியை மறைந்த சோமசுந்தர பாண்டியனது மகனே யிவனென்றால் யானையினது பிடரியிலிருக்கின்ற இளஞ்சிங்கம்போல அயல்வேந்தர்களது சேனைகள் தன்னைச்சூழவரும் பவனிக்கு ஒப்பேது? ஒப்புசொல்லுங் காலத்து யானை மகளை மணந்துவரும் இளையவனாகிய முருகக்கடவுளது பவனியே ஒப்பாகும் என்றனர். இவ்வாறு பவனிவந்து கடவுளையும் ஆலயத்துட்சென்று பரமசிவத்தையும் அங்கயற்கண்ணம்மையையும் பணிந்து மீண்டு அரண்மனையிற்சென்று பெற்றோரை வணங்கினன்.

பின்பு திருமணத்துக்கு வந்தவர்களை அறுசுவையோடு முண்பித்து நானாவிதவரிசைகளை அவரவர்க்குத்தக்கபடி செய்வித்து அவர்களுக்கு விடைகொடுத்துப் பின்பு தேவர்களுக்கும் விடைதந்து சுந்தரபாண்டியர் அரசுசெய்திருக்குநாளில் தேன்பொருந்திய மலர்மாலையைத் தரித்த திருமகனை நோக்கிக் குமாரனே! நீ கேட்பாயாக இந்திரனும் கடலும் உனக்குப் பகையாகும் மகமேருசெருக்கடையும் அப்பொழுது இந்திரன் முடிசிதற, இந்த வளையாலெறி கடலின்மீது இவ்வேலைவிடு மகமேருவை இச்செண்டாலடி என்று அம்மூன்றையும் எடுத்துக்கொடுக்க உக்கிரவருமன் பிதாவைத் தொழுது அம்மூன்று ஆயுதங்களையும் வாங்கி வெற்றிபொருந்திய இடபத்துக்கொப்பாக எதிராக நிற்கும் புதல்வனுக்கு உக்கிரபாண்டியனென்று எவற்றிற்கு முதலாகிய வேதங்கள் முழங்க, பலவாத்தியங்களும் ஆரவாரிக்க, முடிசூட்டித் தனது ஆக்ஞையும் அரசுரிமையும்-ஒப்பற்ற செங்கோலும் அவர்க்குக்கொடுத்து இராஜ தந்திரத்தால் அரிய சுமதியென்னும் மந்திரியையும் பழமையான பெருமைபொருந்திய நூலறிவினை யுடையோரையும் நோக்கி வாருங்கள் பெரியோர்களே! இவனைக்கண்களை இமைகாப்பதுபோலும், அறிவைக்கொடுக்கும் கல்விபோலும் காக்கக்கடவீர். இது உம்முடைய கடமை, இம்மண்ணாட்சி யிவனது என்று புதல்வனை அவர்களிடத்திற் கொடுத்துப் பின்பு கொடிய வேலாயுதத்தையுடைய முருகக்கடவுளுக் கொப்பானவனை வேறாகநோக்கி ஐயனே! இவ்வுலகத்தை நெடுநாளாகத்தாங்கி ரக்ஷித்தனன் இதுமுதல் நீதாங்கி இந்தக் குற்றமற்ற மனத்தினை யுடையாரது செல்வழி நடந்து நீயும் செங்கோல்செலுத்தி மிக்கசெல்வத்தோடு பொலிவுபெற்றிருப்பாயாகவென்று சொல்லிப் பின்னர் தன்னிச்சையால் வேண்டிய இனியவருட்படிவங் கொள்ளத்தக்க முடிவில்லாத இன்பமூர்த்தியானவர் சொல்லுதற்கரிய சிவகணங்களை யெல்லாம் பழைய வடிவமாகும்படிச் செய்து தடாதகைப் பிராட்டியோடும் பொன்னாற்செய்து விளங்காநின்ற பெரிய ஆலயத்துட்புகுந்து பொலிவுபெற்றிருந்தனர். அதன்பின்பு உக்கிரவர்மன் இவ்வுலகத்தை யாண்டுகொண்டிருந்தனன்.

உக்கிரகுமாரனுக்கு வேல்வளை செண்டு கொடுத்தபடலம் முற்றிற்று.

சிவமயம்.

# பதின்மூன்றாவது
# கடல்சுவற வேல்விட்ட படலம்.

கலி விருத்தம்.

வளையொடுசெண்டுவேன்மைந்தற்கஞ்சுரும்
பளையவேம்பணிந்தகோனளித்தவாறிதத்
தலையவிழ்தாரினுன்றனயன்வேலைமே
விளையவனென்னவேலெறிந்ததோதுவாம்.

இதன்பொருள்.

அழகிய வண்டுகள் சத்திக்கின்ற வேப்பமலர் மாலையாகதரித்த சௌந்தரபாண்டியனாகிய பெருமான் தனதுபுத்திரனுக்குச் சக்கரத்தையும், செண்டையும், வேலையுங்கொடுத்த விதமிதுவாகும். இனி முறுக்கவிழ்ந்த மலர்மாலையைத்தரித்த அசுசௌந்தர பாண்டியனுடைய புத்திரனாகிய உக்கிரகுமார பாண்டியன் சமுத்திரத்தின்மேல் (சூரபன்மனுடைய வலிமையானது கெடும்படி வேலாயுதத்தை யெறிந்த) குமாரக்கடவுளைப்போல வேலை யெறிந்த திருவிளையாடலைச் சொல்லுகின்றோம்.

உக்கிரகுமாரபாண்டியன் சந்திரன்போன்ற வெண்கொற்றக் குடையெங்கும் நிழலைச்செய்ய வீற்றிருக்குநாளில் அச்சமில்லாத மிகுந்த புண்ணியவேள்விகளைத் தேவர்கள்சூழ்ந்து போற்றச்செய்து வருநாளில் செய்தற்கரிய அசுவமேதயாகம் தொண்ணூற்றாறுசெய்து நிறைவேறுமிடத்து இந்திரன் உக்கிரபாண்டியன்மீது பொறாமைகொண்டு கோபித்து பாண்டிநாடெல்லாம் வளமிகுந்து பொன்னாடுபோலப் பொலிவுபெற் றிருப்பதால் இந்தப் பாண்டியன் வேள்விசெய்வதென்னென்று நினைத்து ஒருபாயத்தையுன்னி சமுத்திரராஜனையழைத்த நீ திடீரென்று பெரியகடலாற் சூழப்பட்டவேழுலகத்தையும் ஒருமிக்க அழிக்கின்ற உகாந்தகாலவெள்ளத்தைப்போலக் கோபித்துப்போய் அரியகாவலையுடைய மதுரையை அழித்துவிடென்றான். அதைக்கேட்ட சமுத்திரராஜனும் இதனால் விளைவதுதெரியாமல் பேய்களுங் கண்ணுறங்கும் நடுராத்திரியில் செழுமைபொருந்திய வயல்களாற் சூழப்பட்ட மதுரையைச்சூழ்ந்து அழித்துவிடுதலை நினைத்துப் பொங்கி அலைகளாகிய கரங்கள் அண்டகூடமெங்குஞ்சென்று ஆரவாரித்து அலைத்து உகாந்தகாலத்தில் அலைததாரவாரிக்கும் வெள்ளமாய் சந்திரமண்டலத்தையெட்டி முட்டி வருகின்ற ஓரஞ்சனமலைபோல மண்ணுலகமும் விண்ணுலகமும் நடுங்க மரக்கலங்களையுடைய கடலாகியவெள்ளம் மதுரைமீதுவருகின்ற செயல் இராத்திரிகாலத்தில் சந்திரன்மீது விஷம்பொருந்திய வாயினையும் கரியவுடலினையும் உடைய ஒளிபொருந்திய இராகுவென்னும் பாம்பானது விழுங்கும்படி வருவதையொக்கும் அல்லது கரியமேகம் அம்மதுரையை மூடிக்கொள்ளவருவதை யொக்குமென்று சொல்ல வருகின்ற கடல்வட்டமாகிய ஆமை கேடகமாகவும், வாளைமீன்கள் வீசுகின்ற வாள்களாகவும், மகரமீன்களே நெற்றிப் பட்டத்தையுடைய யானைகளாகவும், பாய்கின்ற அலைப்பரப்புகளே தாவுகின்ற குதிரைகளாகவும், ஓடுகின்ற தோணிகளே இரதமாகவும், இத்தன்மை

யான சேனைகளோடு கடலானது பாண்டியன்மேல் சண்டைசெய்தற் கெழுந் ததை யொப்பாகும் இத்தன்மைபாக வெழுந்துவந்த கடலானதுமேகங்கள் கண்ணுறங்குமதிலாற் சூழப்பட்ட நல்லநகரத்திற்குக்கிழக்கேவந்து சேர்ந்த மாத்திரத்தில் வெள்ளியம்பலத்தில் திருநடனஞ் செய்கின்ற சோமசுந்தரக் கடவுள் அர்த்தராத்திரியில் சித்தராகி உக்கிரகுமார பாண்டியன் முன்னர் வந்து அவன்கனவில் புன்முறுவல்தோன்ற நின்று அருளிச்செய்கின்றார்.

ஓ பாண்டியனே! உன்பட்டணத்தைபழிக்கக் கடல்வருகின்றது நீவி ரைவாக வெழுந்துபோய் வெற்றிவேலைப் பிரயோகித்து ஜெபமடையக்கடவா யென, கூப்பிய கையோடும், துதிக்கின்றநாவினோடும், நித்திரையினின்றெழு ந்து பேய்களுமுறங்காநின்ற இரவில் தான்கண்டகனவையுணர்ந்து அரசன் பள்ளியினின்றெழுந்து பலவாயிலையுங்கடந்து மந்திரிகளோடு விரைந்து சமீ பித்து உலகமிறந்ததென்று சொல்லவருகின்றகடலைக்கண்டு அளவிறந்தவதி சயத்தை யுடையவனாகி நிற்கின்ற சமையத்தில் கனவிலேவந்த சித்தவேடத் தையுடையவர் நனவிலும் வந்து அரசனுடைய நினைவைக்கண்டு அப்பனே காலதாமசஞ்செய்யவேண்டியதென்னை! உன்பேரில்கோபித்து கடலைப்போல வந்த சத்துருவைப் பெருமையும் வலியுங்கெட கூரிய வேலாயுதத்தை யெறி ந்து உலகமுடிவைத் தீர்க்கக்கடவாயென்று சொல்ல உக்கிரபாண்டியன்கை யில் எடுத்தவேலாயுதத்தைவலமாகத்திரித்து எறிந்தபோது அவ்வேலினது முனையானது மடுத்தவுடனே அக்கடலானது சுஃறென்னும் ஒலியோடுபற ந்து பெருமைகெட்டு அப்பாண்டியன் கணைக்காலினளவாயினது அழுகிய வேத வேள்வியைத் தடுப்பதன்றி யுலகெலாஞ்சிந்த வேறுன தந்திரந்தைச் செய்த இந்திரனுடைய ஏவலால்வந்த கடலானது வஞ்சகர்க்குநன்றி செய்து தமது வலியிழந்தவரைப்போல வலியிழத்தல் என்று முள்ளதன்றோ.

புண்ணியனிடத்தில் நுழைந்தவேலால் கடலைப்புறங்கொடுக்கக் கண் ட பாண்டியனிடத்து மண்ணிடைநின்ற சித்தர் ஆகாயத்தினிடத்து ஞானக் கண்ணினால் நிறைவாகக் காணப்படுங்கிருபையினால் வடிவங்கொண்டு தடாத கைப்பிராட்டியாரோடு விடையின்மீது விளங்கித்தோன்றிநின்றனர் அப்பொ ழுது திரிநேத்திரமும் சதுர்ப்புயமும் மூன்றாம்பிறையைத்தரித்த செவ்வா னத்தையொத்த சிவந்தசடையும் காளகண்டமுந்தெரிந்து உக்கிரகுமாரபா ண்டியன் அன்போடுபணிந்தெழுந்து பரவி பெரிய அன்புந்தானுமாகத்தக்க அஞ்சலிசெய்தேத்தித் தரைமிசைநடந்துசெல்ல கடவுளானவர்பஞ்சதுந்துபி களும் ஆரவாரிக்க, சிவகணங்கள்வணங்கிச்சூழ, வேதகீதங்கள் அஷ்டதிக்கி னுந் ததும்பித்தாக்க தேவர்களெல்லாந்துதிக்க ஆகாயமார்க்கமாக வந்து ஆ லயத்தைச்சார்ந்தார். அப்போது அஞ்சலிசெய்துசேவித்து அருகாகவந்த அரசன் ஆலயத்தையடைந்து வணங்கிவிடைபெற்று மாதர்கள் அட்டமங்க லந்தாங்கப்பார்த்து மேகங்கள்தவழாநின்ற சிகரங்களையுடைய அரண்மனையி ற்புகுந்து வளைந்தமதில்சூழ்ந்த மதுரையையும் விளைகின்றவயல்களையுடைய நகரமுதலிய எல்லாவற்றையும் வெள்ளியம்பலத்துள் திருநடனஞ் செய்கின்ற நடராஜருக்கேசேர்த்து உலகுக்கெல்லாம் ஆதாரமாக யிருந்தனன்.

**கடல்சுவற வேல்விட்ட படலம் முற்றிற்று.**

சிவமயம்.

பதினான்காவது

# இந்திரன்முடிமேல் வளையெறிந்தபடலம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

மின்னவிர்மணிப்பூண்மார்பன்வேலையைவேலால்வென்று
பொன்னவிர்வாகைவேய்ந்தபுகழுரைசெய்தனேக
நன்னகராளிசெம்பொனகைமுடிசிந்தவந்த
மன்னவன்வளைகொண்டோச்சிவென்றதும்வகுத்துச்சொல்வாம்.

இதன்பொருள்.

மின்னலைப்போலும் விளங்குகின்ற இரத்தினமிழைத்த ஆபரணத்தையணிந்த மார்பையுடைய உக்கிரகுமார பாண்டியன் கடலைத் தமதுவேலால்வென்று அழகுபொருந்திய வெற்றிமாலையைத்தரித்த புகழைச் சொன்னோம் இனிச்சுவர்க்கலோகத் தரசனாகிய இந்திரனுடைய அழகியபொன்முடி சிந்தும்படியாக அந்த உக்கிரகுமார பாண்டியன் சக்கராயுதத்தை யெறிந்து வென்ற திருவிளையாடலைச் சொல்லுகின்றோம்.

உக்கிரகுமார பாண்டியன் அரசுசெய்திருக்குநாளில் நவக்கிரகங்கள் மாறி மழைபெய்யாது மறுப்பப் பயிர்கள் விளைவின்றி புல்லினது தலைகளுந் தீய்ந்து அழகியமூன்றுநாடும் வறுமையாற்றுன்பமடைய மூவரசர்களும் அந்தத்துன்ப நீங்கும்பொருட்டு அகஸ்தியர் வசிக்கின்ற பொதிகைமலைசென்று அகஸ்திய முனிவரைக்கண்டு தங்கள் நாட்டில் மழையில்லாமையால் துன்பமுற்ற செய்தியைச்சொல்ல பரமசிவனுக் கன்பராகிய அம்முனிவர் கிரகங்களின் நிலையைக்குறித்துப் பார்த்து இனிமழையில்லை யாதினாலென்றால், சூரியன் செவ்வாய்க்குமுன்செல்ல சுக்கிரன்பின்பு சென்று நடக்குஞ் செய்கையால் கடலாற்சூழப்பட்டவுலகில் பன்னிரண்டுவருஷம் மழைபெய்யாதென்று நூல்கள் சொல்லுகின்றன, ஆதலால் மழைபெய்விப்போனாகிய இந்திரனிடத்திற்சென்று கேளுங்களென, மூவரசர்களும் யாங்களிந்திரனிடத்தில் எவ்வாறு செல்வோமென அதற்குக்குருமுனிவர் சோமவாரவிரத நோற்றுவெள்ளிமன்றவ னருளைப்பெற்று ஆகாயமார்க்கமாகச் செல்லுங்களென்று சொல்லி அந்நோன்பின்விதியை அவர்க்குச்சொல்லத் தொடங்கினர்.

உத்தமமாகிய தேவர்களுக்குள்ளே பரமசிவனுத்தமனானவன், உத்தமமாகிய சத்திகளுக்குள்ளே உருத்திராணியுத்தமியானவள், உத்தமமாகிய விரதங்களுக்குள்ளே சோமவாரவிரதம் உத்தமம் இப்படிப்பட்ட சோமவாரவிரதம் மந்தரம் காசிமுதலியபதிகளிலிருந்து நோற்றதினாலே யுண்டாகும் பலனிலும் மதுரையிலிருந்து நோற்றிடில் கோடிபங்கதிமாம் இந்தச்சோமவாரவிரதம் அதிகமென்பது யாதினாலென்றால் சோமசுந்தரக்கடவுளுக்குரிய

பாடன்மறையுந்தெளியாப்பரமன்
கூடல்கோயில்கொண்டானென்னே
கூடல்போலக்கொடியேனகமு
மாடலரங்காவமர்தானென்னே.

நீலவண்ணன்றேறுநிமல
னாலவாயிலமர்ந்தானென்னே
யாலவாயானலரில்வாசம்
போலென்னுளமும்புகுந்தானென்னே.

என்று இப்படிப்பாணபத்திரனை ரட்சிக்கும்பொருட்டுப் பருந்துடனே நிழல்போகுதல்போல வீணைநரம்புடனேசேரப்பாடின இன்னிசைத்தேனானது ஆகாயவாசிகளுடையசெவியாகியவாய்க்கால்வழியேயோடி மயிர்த்துவாரங்களிலேவழியத்தேங்கி அவர்களுடைய அமுதமயமானவுடலை இன்னிசைமயமாகச்செய்தது பின்னும் மரங்களெல்லாம் அசையாதுநின்றன. கடல்கள் ஒலியாதிருந்தன. நீண்டமலைபருவிகளும் நதிகளும் புரண்டுதுள்ளாமனின்றன இப்படிகருணைக்கடலான விறகாள்பாடினசாதாரியான இன்னிசைத்தேனைப்பருகிச்சித்திரமெழுதவல்லவன் எழுதிவைத்த சித்திரங்கள்போலச் சராசரங்களெலலா மசையாதிருக்க விஞ்சையர்களிலே சிலர்வீணையைக்கைநழுவவிட்டுச்சோர்ந்தார்கள் சிலர்விரல்நடாத்துகின்ற வீணைநரம்பினொலியும் கண்டத்தொனியும்வேறுகிவேர்த்தார்கள் சிலர் நாணி சந்தோஷம் அதிகமாய்நாக்குக்குழறத்தாங்கள்நாயகிகள்மேலேமயங்கிவிழுந்தார்கள் பின்னும் இந்த விறகாளான சோமசுந்தரக்கடவுளின்பாடல்கேட்டுப் பிரமன் கடவுளின்பாதத்தியானமானான். விஷ்ணு ஆனந்தக்கடலில்முழுகினான், இந்திரன் எனக்கு ஆயிரங்கண்களும் ஆயிரங்காதுகளாகவில்லையேயென்றான். தபோதனர்களும் முத்தர்களும் சித்தர்களும்கடவுளாகிய கடலில்தங்களன்பாகிய ஆற்றுடனேகூடி ஆனந்தக்கண்ணீர்வெள்ளம்பாய பேரின்பக்கடலிலேமுழுகினார்கள். இன்னும்நாயகருடனே கூடினபெண்களெல்லாம் கூடிக்கலவிக்கடலிலே முழுகினார்கள். நாயகரைப் பிரிந்த பெண்களெல்லாம் நாயகர்மேல் மனஞ்செல்ல மன்மதபாணத்தினாலே வருந்தி மயங்கினார்கள். பாம்புகள்-மயில்கள்-யானைகள்-சிங்கங்கள் மான்கள்-புலிகள் எல்லாமயங்கித் தங்கள் தங்கள் பகைதெரியாமல் இந்த இன்னிசைவலைக்குளகப்பட்டுசோர்ந்தன. பூமிவெடித்துவெம்மையேறக் கிளைகள்கரிந்தமரங்களுக்குக்காதறிவுண்டாகி நல்லோர்கள்போல எங்குந் தளிர்த்துமுகமலர்ந்தன. தேவர்-மனிதர்-விலங்கு-புள்முதலானவைகளெல்லாம் அந்தக்கரணங்களடங்கக்கடவுள்பாடின இன்னிசைமயமாயின. இப்படிகடவுள்பாடின முல்லைப்பண்ணாகிய சாதாரிராகம் சராசர வுயிர்களையும் உலகையும் எட்டுதிக்கையும் விழுங்கித்தன்மயமாக்கி எமநாதனை அவனுடம்பையுமுயிரையும் உருகச்செய்தது. அப்போதுஎமநாதன் பரவசனாயிருக்க, பாடினவிறகாள் தம்முடைய விறகுசுமையுடனே மறைந்தருளினார்.

அவர்போனபின்பு எமநாதன் அந்தச்சாதாரிராகம் இதுவரையிலுநான்தெரிந்தேயன்றுதெரிந்தேனென்று ஒருவர்சொல்லவுங்கேட்டிலேன் ஆனால்

இதுதேவராகம்இந்தத்தேவராகத்தையார் இவனுக்குச்சொல்லிக்கொடுத்தார்களோ இந்தராகம் கடவுளேயன்றி மனிதர்களிலே தெரிந்தவர்களாரென்று மிகவும்அதிசயித்துதள்ளும்படியான இந்தக்கிழவன்பாடலே யிப்படியானால் இதுகற்றுக்கொடுத்த பாணபத்திரன் பாடலெப்படி யிருக்குமோவென்று மதித்துப்பயந்து தன்னுடைய சமையலாள்கள்முதலான கூட்டங்களெல்லாம் நடுநடுங்கித்தொடர அன்றிராத்திரியே பிரயாணமாய்ப் பலவிதமான சோமன் உடுப்புப்பெட்டிகளும் ஆபரணப்பெட்டிகளும் மடக்குப் பெட்டிகளும் அங்கங்கேகிடக்க வெட்கமும்பயமுமிஞ்சி வீணைகளேயும்போட்டுவிட்டு வடதிசையைக்குறித் தோடிப்போனான் அவன் போகும்போது பல்லக்கு ஒருவழி, பாடகிகளொருபுறம், குடையொருபுறம், கற்பவர்களொருபுறம், வேலையாள்களொருவழி, நாணழிந்து பாடற்கீழ்மக்கள் ஒருவழியாகத்தானும் பயந்துபோயினன். அன்றிராத்திரியேவிடைமேலழகரான சோமசுந்தரக் கடவுள் பாணபத்திரன்கனவிலேயெழுந்தருளி ஓபத்திரனே உனக்குஎதிரியாய்வந்த ஏமநாதனிடத்திலே இன்றுசாயந்திரம் விறகுதலையாளாய்ச்சென்று நான் பத்திரனடிமையென்றுசொல்லிப்பாடி அவனைவென்று துரத்தினேன் இதுதானே நீ என்னைவேண்டிக்கேட்டுக்கொண்டதென்று மறைய பாணபத்திரன் விழித்தெழுந்து மனத்தாலும் நினைக்கக்கூடாத சொல்லைக்கேட்டு மிகவும்பயந்து இப்படிச்சொல்லுதற்கோ நான் கடவுளை வேண்டினதென்று சூரியோதயமாகுமுன்னே திருக்கோயிலுக்குப்போய் சோமசுந்தரக்கடவுள் சந்நிதியில் வணங்கிநின்று எம்பெருமானே தேவரீர்.

கடியகானகம்புகுதவோகட்டியவிறகை
முடியிலேற்றவோமுண்டகத்தாள்கணொந்திடவந்
தடியனேன்பொருட்டாதசொற்பகரவோவஞ்சக்
கொடியனேன்குறையிரந்தவாவிளைந்ததேகுற்றம்.

நெடியனேமுதல்மானவர்நெஞ்சமுஞ்சுருதி
முடியனேகமுங்கடந்தநின்முண்டகப்பாதஞ்
செடியனேன்பொருட்டாகவிச்சேணிலந்தோய்ந்த
வடியனேற்கெளிதாயதோவையநின்பெருமை.

நாதவந்தமுங்கடந்தமெய்ஞ்ஞானவானந்த
போதமென்பரஃதின்றுருபுடவிமானிடமா
யாதபங்கெறச்தறிந்தவிந்தனஞ்சுமந்தடியேன்
பேதையன்பளவாயதோபெருமநின்னுருவம்.

மறிந்ததெண்டிரைகிடந்தவனுந்தியில்வந்தோ
னறிந்ததன்றரும்பொருள்வரம்பகன்றெழுவிசும்புஞ்
செறிந்தவண்டமுங்கடந்ததுசிறியனேன்பொருட்டாத்
தறிந்தவிந்தனஞ்சுமந்ததோதம்பிரான்முடியே.

என்றுபத்திரன் மீனாட்சிசுந்தரேசரைத்துதித்துவலஞ்செய்துதொழுதுமீண்டு வரகுணபாண்டியன் அரசாட்சிமண்டபம்வந்து அரசனைவணங்கி

நிற்க, பாண்டியன் சேவகரையழைத்து வடக்கேயிருந்துவந்தபாடகனை இங்கே அழையுங்களென்ன சேவகர் அவனிருக்குமிடம்போய் அவன்பயந்தோடிப்போன சங்கதிதெரியாமல் அங்கெல்லாந் தேடிக்காணமலுழல, அயல்வீட்டுக்காரர்தங்களுக்குத்தெரிந்ததைச் சேவகரோடுசொன்னதாவது, ஐயா சேவகர்களே அந்தப்பாடகன் நேற்று இங்கேயிருந்தான் ஒருவிறகுதலையன் பத்திரனடிமையென்று சாயந்திரம்வந்துபாடினான் அவ்வளவுதா னெங்களுக்குத்தெரியும்பின்பு பாதிராத்திரியில் பிரயாணமாய்ப் போய்விட்டானென்று சொல்லக்கேட்டுச் சேவகர் விரைந்துசென்று பாண்டியனைவணங்கி அயல்வீட்டார் சொன்னபடியேசொல்ல, சபையாரெல்லாம் அதிசயித்துக் கூத்தாடினார்கள். அப்போதுவரகுணபாண்டியன் அநுமானங்கொண்டு தன்னைச்சேர்ந்த பாணபத்திரனைப்பார்த்து அந்தப்பாடகன் என்னகாரணத்தினாலே ராத்திரியே பிரயாணமானான். நீநேற்று என்னிடத்திலிருந்துபோனபின்பு என்னசெய்தாயென்றுகேட்க, பத்திரன் வரகுணபாண்டியனைவணங்கி ஐயா நேற்று இங்கிருந்துநான்போய் சோமசுந்தரக்கடவுளைவணங்கி என்குறைகளைச் சொல்லிக்கொண்டு பின்பு என்வீட்டிற்போயிருந்தேன் இராத்திரி என்கனவிலே கடவுள்வந்து பத்திரா உனக்காகவிறகுதலையனுப்ச்சென்று உன்னெதிரிமுன்னே சாதாரிராகம்பாடி அவனைவென்றுதுரத்தினோமென்றார் நான் உடனேவிழித்தேன் இதுதான் நடந்ததென்று சொன்னான். அப்போது சேவகர்போய் விசாரித்து வந்துசொன்னதும் பத்திரன் கனவின்செய்தியும் ஒத்திருந்ததினாலே இதுகடவுள் திருவிளையாடலிலொன்றென்று பாண்டியன் தெளிந்து பத்திரன் அன்பையும் கடவுளருளையும்வியந்துகொண்டாடி மதுரேசரைப் போய்வணங்கி பாணபத்திரனை யானைமேலேற்றி மதுரைவலஞ்செய்வித்து அனேகம் வெகுமானஞ்செய்து பாணபத்திரனைப்பார்த்து பிரமன் முதலாகிய எல்லாரையும் ஏவல்கொண்டகடவுளே உனக்குவிறகாளாய் வந்து ஏவல்செய்து உன்குறையைத் தீர்ப்பாரானால் எல்லாரும் உனக்கு ஏவலாளிகளல்லவோ? ஆதலால் இனிநானும் ஏவலாளிபேபிசகில்லை இனி நீர் இன்றுமுதல் வேதநாதனையே பாடத்தக்கதென்று உபசரித்தனுப்பினான். பத்திரன் தனக்குப் பாண்டியன்கொடுத்தனவெல்லாம் தன்னையடுத்த வித்வான்களுக்கும் கற்றுச்சொல்லிகளுக்கும் பங்கிட்டுக்கொடுத்துத் தன்னுடைய பாடகர்களுடனே வீட்டுக்குவந்து அளவில்லாதமகிழ்ச்சிகொண்டிருந்தான்.

விறகுவிற்றபடலம்

முற்றிற்று.

---

உ

சிவமயம்.

## நாற்பத்திரண்டாவது

# திருமுகங்கொடுத்தபடலம்,

அறுசீரடியாசிரிய விருத்தம்.

முன்னவன்மதுரைமூதூர்முழுமுதலிசைவலானை
யின்னிசைபாடிவென்றதென்னுரைசெய்தேனந்தத்
தென்னவன்சேரன்மாடேதிருமுகங்கொடுத்துப்பாணர்
மன்னவன்றனக்குச்செம்பொன்வழங்கியவழக்கஞ்சொல்வாம்.

இதன்பொருள்.

முழுமுதற்கடவுளும் மதுராபுரித் தலைவருமாகிய சோமசுந்தரக்கடவுள் இசையிலே வல்லவனாகிய ஏமநாதனை அவனஞ்சியோடும்படி இசைபாடி வென்ற திருவிளையாடலை நான் என்னவென்றெடுத்துச் சொல்லுவேன். இனி, அந்தச் சோமசுநதரக்கடவுள் பாணபத்திரருக்காகச் சேரர்பெருமானிடத்தில் திருமுகமனுப்பி அளவில்லாதபொற்குவைகளை வாங்கிக்கொடுத்த திருவிளையாடலைச் சொல்லுகின்றோம்.

பின்புபாணபத்திரன் பாண்டியன்சொன்னதே சரியென்று அன்றுமுதல் பாண்டியனிடத்தில்பாடுந்தொழிலைவிட்டு கடவுள் திருக்கோயிலுக்குப் போய் மூன்றுகாலமுந்தினந்தோறும் சந்நிதிமுன்னேநின்று பாடுவதேநியமமாகக்கொண்டு பாடிவருகிறநாளில் கடவுள் திருக்கோயிலுக்குப்போய் பாடுவதேயன்றி வேறே தொழிலில்லாமையினாலே பத்திரன் அதிகவறுமையினாலே வருந்த அவன் அப்படிவருந்துவதைச் சோமசுந்தரக்கடவுள் தரிக்காமல் பாண்டியனுடைய பொக்கிஷத்திலுள்ள திரவியங்களைக் கொண்டுவந்து தம் முன்னே நின்றுபாடுகிற பாணபத்திரன் கண்ணுக்குமுன்னே சிலநாள் வைத்துக்கொண்டுவந்தார். சிலநாள் பொன்பூவராகன்வைத்தார். சிலநாள் ரத்தினாபரணங்கள் வைத்துவந்தார். சிலநாவ் பொன்னுடைகள் வைத்தார். சிலநாள் சாமரைக்காம்புத்தகட்டுப் பொன்னைவைத்தார். சிலநாள் சிங்காசனப்பொன்றகடுகளைக்கொண்டுவந்துவைத்தார். இப்படி ஒருவருக்குந் தெரியாமல் கடவுள் கொடுத்துவந்த பொருள்களெல்லாம் பத்திரன் நெருப்பிலிட்டுருக்கி அழித்துடைத்துத் தன்னைச்சேர்ந்தவர்களுக்கும், யாசகர்களுக்கும், தன் கைபார்த்திருக்குமவர்களுக்கும், பிறருக்குமாறாமல்கொடுத்து அவர்கள் துன்பமும் தன்வறுமையுந் தீர்ந்துகொண்டுவந்தான். இப்படிப்பாணபத்திரனுக்குத்தினங்கொடுத்துவந்த சோமசுந்தரக்கடவுள் பின்புசிலநாள்கொடாதிருந்தார். அக்காலம் பாணபத்திரன் திருக்கோயிலுக்குப்போய்க் கடவுளைவணங்கி ஒன்றும்பெறாமல் சும்மாவந்து பெருந்துன்பத்திலழுந்திவேறே பிழைக்கும்வகை கிடையாமல்மிகவும் இளைத்துவாடித் தரித்திரம்பொறுக்கமாட்டாமல் நித்திரைசெய்தான். அப்படி அவன் தூங்கும்போது கடவுள்கனவில் ஒரு சித்தவடிவுகொண்டுவந்துநின்று அப்பா பத்திரா! உனக்காகயாம்பாண்டியன் பொன்னறைக்குள்ளிருந்தபொருள்களைப்பெருநாளம்புண்டகனிபோல்கொண்டுவந்துகொடுத்தோம் இனிஅப்படிக்கொடுத்தால் எம்மிடத்தில்

மிருந்த அன்புள்ளவனுன பாண்டியன்றெரிந்தால் இவ்வளவு கட்டுக்காவலிலிருக்கிறபொருள்களைக்களவுசெய்து கடவுளேயென்றுமனம்வேறுபட்டுபொக்கிஷம் காக்கிற காவலாளிகளைத் தண்டித்தாலும் தண்டிப்பான் ஆதலால் இனி உன்போலஎம்மிடத்தில் அன்புள்ளவனுனசேரமானுக்கு ஒருஓலையெழுதிக்கொடுக்கிறேம்நீ அந்த ஓலையுடனேபோய்ச்சேரமானைக்கண்டுவாவென்றுசொல்லி.

திருச்சிற்றம்பலம்.

மதிமலிபுரிசைமாடக்கூடற்
பதிமிசைநிலவும்பானிறவரிச்சிறை
யன்னம்பயில்பொழிலாலவாயின்
மன்னியசிவனியான்மொழிதருமாற்றம்.

பருவக்கொண்மூப்படியெனப்பாவலர்க்
குரிமையினுரிமையினுதவியொளிதிகழ்
குருமாமதிபுரைகுலவியகுடைக்கீழ்ச்
செருமாவுகைக்குருசேரலன்காண்க.

பண்பால்யாழ்வல்லபாணபத்திரன்
றன்போலென்பாலன்பன்றன்பாற்
காண்பதுகருதிப்போந்தனன்
மாண்பொருள்கொடுத்துவரவிடுப்பதுவே.

திருச்சிற்றம்பலம்.

எனத்திருமுகப் பாசுரத்தை யெழுதிப் பாணபத்திரன் கையிற்கொடுத்துச் சித்தராகவந்தவர் மறைந்தருளினர். உடனேபத்திரன்நித்திரைதெளிந்துவிழித்தெழுந்து ஆடிப்பாடி ஆனந்தக்கடலிலேமுழுகித் தான்பெற்றதிருமுகத்தைப்பட்டுவஸ்திரத்தில் முடிந்துகொண்டு சோமசுந்தரக்கடவுள் பாதங்களைவணங்கித் திருக்கோயிலைவலஞ்செய்து பத்திரன்விரைவிலே மேற்றிசையைக் குறித்து வழிபிடித்துக்கொல்லைகளும்-குறிஞ்சிநிலங்களும்-பாலைவனங்களும் கடந்துசென்று பலாச்சுளைகள் பழங்களுடனே காலிலேதடுக்க மிகுந்தவளப்பம்பொருந்திய மலைநாட்டுக்குப்போய்கடலாகிய உடையாடையும் மலைகளாகிய முலைகளோடுவிளங்குகின்ற மலைநாடென்கிற பெண்முகத்திலிட்ட திலகம்போன்ற திருவஞ்சைக்களமானது அறப்பெருஞ்செல்வமும் ஐஸ்வரியமும், வீரமும்-வடமொழி தென்மொழிகளும் சிறந்துவிளங்குகின்றதைக் கண்டு பத்திரன் அந்தப்பட்டணத்தில் ஒருபுறத்திலே ஒரு தண்ணீர்ப்பந்தலில் வந்திருந்தான். இப்பால் அந்தத் திருவஞ்சைக்களத்தையாளுகிற சேரமான்கனவிலே அன்றிராத்திரி சோமசுந்தரக்கடவுள், ஒருசித்தராயெழுந்தருளி ஓசேரமான்பெருமானே! யாம் மதுரையிலிருக்குஞ்சித்தர் எம்முடைய ஓலைகொண்டு பாணபத்திரனென்பவன் திரவியங்கள்வேண்டி உன்னைக்காண இங்கேவந்திருக்கிறுன், அவனுக்குவேண்டிய பொருள்களெல்லாங்கொடுத்து அவனைச்சீக்கிரம் நம்முடைய மதுரைவந்துசேரும்படி செய்வாயாகவென்று சொல்லிமறைந்தருளினர் உடனேசேரமான்பெருமான் விழித்தெழுந்துவிடிந்தபின்புதன் மந்திரிபிரதானிகளுக்குத்தெரியச்சொல்லி இப்போதுமீனட்சிசுந்தரேசர் திருமுகங்கொண்டுவந்த பத்திரர் எங்கேயிருக்கிறர்தேடி அழை

த்து வாருங்கோளென்று ஏவல்வீரரையனுப்ப அந்தஏவல்வீரர்வீதிதிண்ணை முடுக்குசாவடிசத்திரங்களெல்லாம்போய்த்தேடித் தண்ணீர்ப்பந்தலி லிருக்கிறபத்திரனைக்கண்டுதெரிந்துவிரைவிலேசென்றுசேரமான் பெருமானுக்குத் தெரியப்படுத்தினார்கள். உடனேசேரமான் சேனைகளுடனே எதிர்கொண்டு போய்ப் பத்திரனைக்கண்டு கைகளைத் தலைமேற்குவித்துக்கொண்டு துதிகள் பாடிக்கூத்தாடி நிலத்திலேவிழுந்து தேனைக்கண்ட வண்டுபோல்மகிழ்ந்து திருமுகத்தைவாங்கிக்கண்களிலேயொற்றி முடிமேல்மாலைபாகச் சூட்டிக்கொண்டுஆனந்தக்கண்ணீர்துளும்பஉடம்புபூரித்து ஓலையைப்பிரித்துவாசித்தனர்.

மின்னலைப்போல்விளங்குகின்றசெம்பொன்னாலும்ரத்நங்களாலும் அமைந்தஉப்பரிகைகள்நிறைந்த மதுரையிலிருக்கும் சிவனாகியயாம் எழுதிவிடுக்கும்பாசுரத்தை அழகானதேகம்போல்புலவர்களுக்குக்கைம்மாறுகருதாது கொடுக்கிற சேரநரபாலன் காணக்கடவது தன்னைபபோல் நமதிடத்தன்பனாகிய இன்னிசை யாழ்ப்பத்திரன் தன்னிடத்திற்கு வருகிறதினாலே அவனுக்குவேண்டிய மிகுந்ததிரவியங்களைக்கொடுத்து அனுப்பக்கடவை.

என்று பாண்டியர்குலதெய்வமானசோமசுந்தரக்கடவுளனுப்பின திருமுகத்தின்செய்தியைபபார்த்துச்சேரமான் பெருமான்தனதுமகிழ்வுக்குமுடிவுதெரியாதவராய் அந்தஓலையைப் பொற்றட்டின்மேல்வைத்து அதைமதயானைத்தலைமேலேற்றிப் பாணபத்திரனை முன்னேவைத்துத்தான்பின்னேயிருந்துசாமரம்பணிமாறிப் பலவாத்தியங்களு முழங்கப் பட்டணத்தை வலஞ்செய்வித்து மங்கிலியப்பெண்கள் மங்களதீபங்கொண்டெதிரேவரத் தன்னரண்மனைக்குக்கொண்டுவந்து திருமஞ்சனஞ்செய்துபஞ்சவர்னங்களாலும் சித்திரவிசித்திரமானமணிமண்டபத்திலேபாணபத்திரனை எழுந்தருளப்பண்ணிப்பொன்னாசனத்தி லிருக்கச்செய்து சித்து அறுசுவைப்போசனங்களுமுண்ணச்செய்து சந்தனகளபகஸ்தூரி பனிநீர் புஷ்பதாம்பூலாதிகள்கொடுத்துப் பின்பு கடவுள் அனுப்பிவிடுகவென்று எழுதியிருந்தவினாலேபத்திரனையழைத்துக்கொண்டுபோய் செம்பொன்னறையைத் திறந்துகாட்டி இந்தப்பொருள்களெல்லாம் ஐயாபத்திரரே' உம்மதே ஒப்புக்கொள்ளுமென்ன, அதற்குப் பத்திரன் சேரமானை வணங்கி ஐயா நீரோகடவுளருளுக்குப் பாத்திரமானவராதலால்நீர்கொடுத்ததேஎனக்குப்போதுமென்ன சேரமான்பெருமான்தான் நினைத்தபடியே கொடுக்கக்கொடுக்கப் பத்திரன் போதும்போதுமென்று மிடிதீர்ந்து பல்லக்கு யானைகுதிரைபொன்னுடைகள்பொன்னாபரணங்கள் அநேகந்திரவியங்கள் முதலானபொருள்களெல்லாம் கொடுக்கப் பெற்றுச்சேரமான்பெருமான் ஏழடிபின்தொடர்ந்து வழிவிட்டு மீண்டு நிற்க பத்திரன்மீண்டு மதுரைக்குவந்து முத்தமிழ் மதுரேசரைக்கண்டு தொழுது பாண்டியனது மதுரையிலுள்ளவர்களெல்லாந்தெரிய எல்லாருக்கும் வேதியர்க்கும் புலவருக்கும் இசைப்பாணருக்கும் முறைப்படி கொடுத்துப் பாணரில் தர்மதேவதை போல்வாழ்ந்திருந்தான்.

திருமுகங்கொடுத்தபடலம்
முற்றிற்று.

---

சிவமயம்.

## நாற்பத்துமூன்றாவது

# பலகையிட்டபடலம்.



### கொச்சகக்கலிப்பா.

கருந்துழாய்முகிலொருபாற்கலந்தவர்பத்திரற்குநிதி
திருந்துதாருநியனிடைத்திருமுகமீந்தளித்தநிது
வருந்தியாழவனிசைப்பமழைதூங்குநள்ளிரவி
லிருந்துபாடெனப்பலகையிட்டதூஉமினிப்பகர்வாம்.

### இதன்பொருள்.

துளபமாலையைத் தரித்த கரியமேகம்போன்ற விஷ்ணுவைத்தமது திருமேனியில் பாதியாகவுடைய சோமசுந்தரக்கடவுள் சேரர்கோனிடந் திருமுகமனுப்பி அவரிடத்தில் அளவில்லாதபொருளைவாங்கியும் பாணபத்திரருக்குக்கொடுத்தருளிய திருவிளையாடலிதுவாகும் இனி அந்தபாணபத்திரர் மழையிலே நனைந்தபடியே இராக்காலத்தில் இசைபாடிக்கொண்டு சிவத்தியானத்திலிருக்கையில் அவருக்கு இதன்மேலிருந்து பாடக்கடவாயென்று பொற்பலகையிட்ட திருவிளையாடலைச்சொல்லுகின்றோம்.

பின்பு பத்திரன் தன்னை யுகந்தடிமைகொண்ட சோமசுந்தரக்கடவுளின் திருக்கோவிலுக்குப்போய் மூன்றுகாலமும்வணங்கிவருநாளிலேதிருமுகங்கொடுத்துப்பொருளருளியபின்பு அர்த்தசாமத்திலுஞ்சென்றுவிடையின் பின்னேநின்றுஏழிசையும்பாடிக் கடவுள் அடியார்களும், தேவர்களும்வணங்கமுத்துப்பல்லக்கின்மேலேறிக்கொண்டு தேவி பள்ளியறைக்கெழுந் தருளும்போது சேவித்து இப்படி தினநியமந்தப்பாமல் நடந்து வருகிற நாள்களிலே இந்தப்பத்திரன் என்னவிக்கினங்கள் வந்தாலும்தான்கொண்டநியமம் விடாதவனென்பதை எல்லாருக்குந்தெரிவிக்க கடவுள்திருவிளையாட்டாக ஒருநாள்பள்ளியறைதரிசனஞ்சேவிக்கப்போகும்போது மேகங்கள்குமிறித் திக்குகள்தெரியாமல் ஆகாயமெங்குநிறைந்துமுன்புவருணன்விட்ட மழையைப்போலேமின்னிப்பாம்புகள் பயந்தொடுங்க இடித்துநக்ஷத்திரங்களுந்தெரியாமலிருண்டுஆகாயமானது கருங்கடலைஅடியோடேவாரிக் கவிழ்த்தாற்போலவும், இருப்புக்கம்பிகளை எங்குமூன்றினாற்போலவும், அஞ்ஞானிகள்மனம்போலவும் கீழ்மேலொன்றுந் தெரியாதபடி மழைபொழிய அந்த மழையில் பத்திரன்நனைந்து அந்தமழையைப்பூமழைபொருவதாகநினைத்து வந்தகடவுள்கிருபையாகிய மழையிலேநனைந்து தேன்மழைபொழிவதுபோல நந்தியின் பின்னேநின்று வீணையை யிடதுதோளிலே சாத்திச்சுருதிகூட்டி ஆலாபனம் பண்ணிச் சோமசுந்தரக்கடவுள் செவிவழியேபோய் அருட்பயிர்தலையெடுக்கத்தான்தொடுத்த தமிழினிசையமுதம் மடைதிறந்து நரம்புநனைந்துஓசைம

ழுங்கவும், உடல்குளிர்ந்து நடுக்கவும், கைவிரல்கள் மிறைத்திழுக்கவும், மயிர் சிலிர்க்கவும், கால்கள் சேற்றிலழுந்தவும் நின்று அன்புமிகுந்து என்பையும் உருக்கத்தக்க அமுதவிசை பாடுகின்றான். எப்படியென்றால்,

மாதர்நகையா ப்மதுரேசருண்பலிக்கெம்மனைவாய்வந்து
காதன்முகத்தரும்பிக்காட்டியென்சிந்தைகவர்ந்தார்போலுங்
காதன்முகற்றரும்பக்கையறவுதீரக்கலப்பேன்பாதி
பேதைவுருவாயிருந்தார்நாணிவிழித்தாவிபிழைத்தேன்போலும்.

ஒண்ணுதலாய்வெண்டலைகொண்டுண்பலிக்குநம்மனையினூடேகூடற்
கண்ணுதலாருள்ளாளக்கானமிசைத்தென்னுள்ளங்கவர்ந்தார்போலுங்
கண்ணுதலார்பாடுமெவினயங்கண்டாகலங்கலப்பேன்பாதி
பெண்ணுருவமாயிருந்தார்வெள்கிவிழித்தாவிபெற்றேன்போலும்.

ஐயரியுன்கண்ணுப்திருவாலவாயுடையாரையங்கொள்வான்
மையனகைசெய்தென்வனமுலையின்மேற்செங்கைவைத்தார்போலு
மையனகைசெய்தென்வனமுலைமேற்கைவைப்பமாழ்கிச்சேர்வேன்
றையவிடங்கண்டுநடுநடுங்கிவிழித்தாவிதரித்தேன்போலும்.

என்றிப்படிப் பாடுகிற தும்புருநாரதருக்கு வெகுமானமாகக்கொடுத்த சங்கக்குழைபணிந்த திருச்செவிகளிலேபத்திரன் இன்னிசைத்தேனைஊற்றுகின்ற அடிமைத்தனத்தைக் கடவுள்கண்டருளி இதன்மேனின்று பாடென்று ஆகாசவாக்காகச்சொல்லி ஒருபலகைபத்திரன்முன்னே காணவிட்டார் அப்படி கடவுளிட்டபொற்பலகையின்மேல் பெருமானுடைய அருளாணைக் குப்பயந்தேறி மதுரகீதம்பாடிக்கடவுள் திருவடிகளைத்தியானித்துப் பலகையையுமெடுத்துக்கொண்டு பத்திரன் தன்வீட்டுக்குப்போகும்போது மழைவிட்டு நக்ஷத்திரங்கள்விளங்க வீடுவந்துபுகுந்திருந்தான். இப்பால்வரகுணபாண்டியன்பொழுதுவிடிந்தபின்பு தங்கள்குலதெய்வமான கடவுள் பாணபத்திரனுக்குநின்றுபாடப் பலகையருளின சிறப்புகேட்டுப் பாணபத்திரனையழைத்துவந்து அந்தப்பலகைமே லிருக்கச்செய்து, இந்தப்பத்திரனே மதுரேசனென்று நினைத்து ரத்நாபரணங்கள், விளைநிலங்கள் முதலான பல சிறப்பும் போதும்போதுமென்னக் கொடுத்துப் பத்திரனுக்குமுன்போலவே மாதச்சம்பளமும் நடத்திக்கொண்டுவந்தான். இப்படி பாண்டியனாலே வரிசைபெற்ற பத்திரன் கடவுள் திருக்கோயிலுக்கு நாலுகாலமும்போய்ப் பாடுந்தொழிலைவிடாமல் நடத்திக்கொண்டுவருகிறநாளில் வரகுணபாண்டியனும் வேதத்தின்முதற்பொருளாகிய சோமசுந்தரக்கடவுளின் சந்நிதானத்தில்வந்துசேவித்துத்துதிக்கும் நியமம்வழுவாமல் சிலநாள் கழிந்தபின்பு கடவுளதுசாரூப்பியம்பெற்றுச் சிவபுரமடைந்தான்.

பலகையிட்டபடலம்

முற்றிற்று.

சிவமயம்.

## நாற்பத்துநான்காவது

# இசைவாதுவென்றபடலம்.

எண்சீரடியாசிரியவிருத்தம்.

கூடலம்பதியிலாடகமேருக்கொடியவிற்குருசிலடியவனுக்குப
பாடலின்பரிசிலாகியசெம்பொற்பலகையிட்டபடிபாடினமன்னுன்
வீடரும்பொருவில்கற்புடையாளோர்விறலியைப்பரமனிறையருள்பற்றி
மாடகஞ்செறியும்யாழ்வழிபாடிவாதுவென்றவரலாறுமிசைப்பாம்.

இதன்பொருள்.

நான்மாடக்கூடலென்னும் மதுரையின்கண் பொன்மலையைவில்லாகக் கொண்டருளிய சோமசுந்தரக்கடவுள் அடியவராகிய பாணபத்திரர் தம்மைப் பாடியபாட்டின்பரிசாகப் பொற்பலகையிட்டருளிய திருவிளையாடலைச் சொன்னோம், இனிகெடுதலில்லாத நிகரற்றகற்பினையுடைய அந்தப்பாணபத்திரரது மனைவியார் ஓர் யாழ்ப்பாணப்பெண்ணைச் சோமசுந்தரக் கடவுளது பூரணகடாக்ஷத்தினால் மூறுக்காணியையுடைய யாழைப்பாடி இசைவாது வென்ற திருவிளையாடலைச் சொல்லுகின்றோம்.

அப்படி வரகுணபாண்டியனுக்குப்பின் அவன்புத்திரனை ராஜராஜ ராஜபாண்டியன்முடிசூடி அரசாளுங்காலத்தில் அவனுக்குக் குலபத்தினிக ளனேகர் காதற்பரத்தைகளனேகரில் ஒருபரத்தை அந்தப்பாண்டியனுக்கு அமுதும் ஆவியும்போன்றவள். பின்னும் அவன்மகிழ மதுரகீதம்பாடும் வித்தையிலும்வல்லவள், அப்படிப்பட்ட அவளுக்கும் பாணபத்திரன்மனைவிக்கும் கீதம்பாடும்விஷயத்தில் பகையுண்டாகி மிஞ்சிப்பாண்டியன் பரத்தையான வள்பத்திரன்மனைவிக்கெதிராக இன்னுமொருபாடகியை வரவழைத்துவிட்டுப்பாடி இவளைகருவபங்கம் பண்ணவேண்டுமென்று நினைத்துப் பாண்டியனுக் குத்தெரியப்படுத்த அவன் அவள் சொல்வழிநடக்கிறவனுகையாலே தேடிஈழ நாட்டில் நின்றும் ஒருசமர்த்தியானபாடகியைவரவழைக்க அவள் தன்னுடை யதோழிக்கூட்டங்கள் பக்கங்களிலேநெருங்க ராஜசபைக்குவந்து பாண்டிய னைக்கண்டுவணங்கி ஒருபுறத்திலிருந்து கின்னரமங்கைபோல வீணைகானம்ப ண்ணிநிற்க அவள்மேல்மனஞ்சென்றபாண்டியன் பழிநோக்காமல் அந்த ஈழ நாட்டாளைப்பார்த்து நீ இபபோது உன்னுடன்பாடவருகிற பத்திரன்மனைவி பக்ஷமாகநாங்கள்பேசினுலும் நீவிடாமல் அவள்வெட்கும்படி ஆணையிட்டுமறித்துப்பாடி வெல்லவேண்டுமென்றுசொல்ல, பின்பு நீ நாளைக்கு வாவென்றுவி டைகொடுத்தனுப்பிவிட்டு பத்திரன்மனைவியைவரவழைத்து உள்ளொன்று வெளிவொன்றாக என்னோடுபாடவல்லவளுமுண்டோவென்று கருவங்கொண்

டு ஒருத்திவந்திருக்கிறாள் அவளோடு நீபாடவல்லையோ வென்று கேட்டான் அதற்கு ஐயா பாண்டியமஹாராஜனே! எனதுகற்பும் மதுரேசன் கருணையும் நிலைகொண்டிருக்கையாலே வந்தவளோடு பாடிவெல்வதே யல்லாமல் நான் பயந்திருக்கிறவ ளல்லவென்று பத்திரன்மனைவிசொல்ல பாண்டியன் அவளையும் நாளைக்குவாவென்றனுப்பிவிட்டு மற்றைநாள் பாண்டியன் சபையிலே இரண்டுபாடினிகளையும் வரவழைத்துப் பாடவிட்டுப் பாடல்கேட்கு முன்னே யாழ்ப்பாணத்திலிருந்து கப்பல்வழியாகவநத பாடினிபத்திரன் மனைவியைப் பார்த்திகழ்ந்து குற்றமெத்தனை, குணமெத்தனை, வீணைக்குத்தெய்வம் யார் முன்னே இசைப்பது எந்தவுயிர் உயிரளவெத்தனை, மெய்யளவெத்தனை உயிர்மெய்யளவெத்தனை இவைகளுக்கு மறுமொழிசொல்லிப்பின்பு நீசாமர்த்தியானால் என்னோடுபாடு இல்லாவிட்டால் நீதோற்றவள் யென்று சொன்னாள் அதற்குப் பத்திரன்மனைவி நீயோ கப்பலிலிருந்திரங்கிவந்த பெருமையும் வித்தையும் வாதஞ்செய்வதில் உற்சாகமும் யாரும் ஆசைபடத்தக்க உன் பெண்மையழகின் செருக்கும் இநதராஜகுமாரன்முன்னே உன்வாயை திறவாவிட்டால் எப்படி விளங்கும் ஏடிபெண்ணே உன்னோடு இசைவாது வெல்ல நான் ஒப்புவேனே யல்லாது சும்மாவாய்ச்சண்டைசெய்ய நான் எதிரியல்லேன் உன்னைப்போலே மானம்விற்றுண்டு பிழைக்கும்வேசிகளே வாய்ச்சண்டைக்குத் தக்கவர்களென்று பத்திரன் மனைவி மறுமொழி சொன்னாள். அப்போது பாண்டியன் அவ்விருவரையும் சண்டை விலக்குகிறவன்போலே விலக்கி இப்போது நீங்களிருவரும் பாடுங்கள் தோற்றவள் வென்றவளுக்கு அடிமையாவதே சபதம் என்று ரோஷமுண்டாக்கிவிடவும் ஈழநாட்டுப்பாடினியானவள் முந்தி வீணையை இடதுதோளிலேசாத்தி அவள் குரலின்படியே கைவிரல்கள் தந்தியைத்தெறிக்க பெருமிதநகை உள்ளேநின்று சிறிதுதோன்ற ஏழிசைப்பாடலை ராஜகுமாரன் காதுக்கின்பமாக மழலையமுதம்போலப் பாடினாள் அதற்குப்பத்திரன்மனைவி வீணையைக்கொண்டு முறுக்காணிகளை முறுக்கிச் சுருதிகூட்டி யக்ஷகின்னரர்கள்நாண விரல்கள்செல்லும் வழியே நாவில்வருகிற இன்னிசை யமுதத்தைப் பலருங்கேட்கப் பாடினாள்.

அப்போதுபாண்டியன் மனக்கருத்தைச்சபையார்தெரியாமல்பாணபத்திரனுடைய மனைவியானவள் பாடினபாடலை மெச்சிக்கொண்டாடினார்கள். பாண்டியன் இலங்கையிலிருந்துவந்த பாடினிபாடலைமகிழ்ந்து கொண்டாடினான். அப்படியான பாண்டியன் கருத்தைத்தெரிந்து சபையார் பாண்டியன் கொண்டாடினபடியே இலங்கைப்பாடினிபாடலைக்கொண்டாடினார்கள் (மன்னவனெப்படி மன்னுயிரப்படி) என்கிறபடியே கொண்டாடின சபையாரைப் பார்த்துப்பாண்டியன்தனக்கு இன்பமானபரத்தை சுகபோகத்தைமகிழ்ந்து நீதிதவறி இன்றுஒருநாளிலே இவ்விருவர்பாடலையும்தெரிந்து சொல்லக்கூடுமோ போங்களென்றனுப்பிவிட்டான். இலங்கைப்பாடினியானவள் பாண்டியன்தன்னை மெச்சினதே வென்றியாகக்கொண்டு பெருங்களிப்படைந்து தன்னிடத்துக்குவந்து தூங்குமஞ்சத்தின்மேலிருந்து இளைப்பாறிக்கொண் டிருந்தாள் இப்பால்பத்திரன்மனைவி மீனாட்சிசுந்தரேசர் திருவடிகளைவணங்கி வருந்திநின்றுகண்ணீரொழுக அழுது ஸ்வாமி! சோமசுந்தரபாண்டியனாகிநீதி

செலுத்தினகடவுளே? இந்தப்பாண்டியன் பக்ஷபாதமான வழக்குச்சொல்ல வுடன்பட்டான், சபையாரும் அவன்சொன்னபடியே சொன்னால் எப்படி நியாயமான நீதிவிளங்கும் ஆனதினாலே உம்முடைய திருவருளாகிய துணைசெய்து எனக்குவந்தபகையைவென்று தரவேண்டுமென்றுவேண்ட கடவுள் அசரீரிவாக்காய் பெண்ணே? நீபயப்படாதை நாளைக்கும் நீயேவெல்லும்படி செய்கிறோம். போவென்ன, பத்திரன்மனைவிவீட்டிற்குப்போயிருக்கமற்றைநாள் பாண்டியன் அந்தஇரண்டுபாடினிகளையும் வரவழைத்து நேற்றுச்சொன்னபடியேசொல்லிப் பாடுங்களென்ன சபையாருமப்படியேசொல்ல அப்போது பத்திரன்மனைவி ஐயா? பாண்டியராஜனே நீரேபக்ஷபாதமானநியாயம்சொல்லுகிறீர் சபையாரும் அப்படியேசொல்லுகிறார்கள், ஆனதினாலேதராசுமுனைபோல நியாயஞ்சொல்லுதற்கு நம்முடையகடவுள் சந்நிதிமுன்னேநின்று பாடினால் இருவர்பாட்டையுங்கேட்டு யாராகிலுமொருவர் இன்னாள்வென்றாளென்றுசொன்னாற்போதும் ஆகையால் அப்படிச்செய்யவேண்டுமென்னஅதற்குப்பாண்டியன் அப்படியே நாளைக்குச் செய்யுங்களென்றுவிடைகொடுத் தனுப்பிவிட்டான், மறுநாள் பாண்டியனும் மந்திரிகளும் தர்மார்த்தகாமமோக்ஷமென்னுநான்கு புருஷார்த்தங்களையுந்தெரிந்தபெரியோர்களும் கூடிப்போய் வெள்ளியம்பலவாணர் மண்டபத்திலிருந்துகொண்டு அந்த இரண்டு பாடினிகளையும் கூட்டிவாருங்களென்ன ஏவலாளர்விரைவிலோடி அழைத்துவந்தார்கள் அப்போது இலங்கைப்பாடினி இந்தக்கிழவி இன்றுதோற்று எனக்கடிமையாவதற்குச்சந்தேகமில்லையென்னு மனக்களிப்புடனே முன்னேவந்தாள். பத்திரன்மனைவியும் தனதுகற்பும் கடவுள் திருவடிமேலன்பும் நிலையாகக்கொண்டுவந்தாள் அப்போதுசோமசுந்தரக்கடவுள் முத்தாரங்களும் ரத்தினகேயூரங்களும் இன்னும்பலவிதஆபரணங்களும்விளங்க அலங்கிருதராய்த்தாமும்ஒருவித்வானாகிப் பெரியோர்கூட்டத்திற் கூடிவந்திருந்தார், அப்போதுகப்பலிறங்கி வந்தவள் முன்னேபாட அதைகேட்டுச்சபையார் ஒன்றுங்கொண்டாடாமற்பேசாதிருந்தார்கள். அப்போது பத்திரன் மனைவி சரஸ்வதிபோலிருந்துவீணையைக்கொண்டு பாடினாள் எப்படி யென்றால்,

குடங்கைநீரும்பச்சிலையு மிடுவார்க்கிசையாக்குஞ்சரமும்
படங்கொள்பாயும்பூவணையுந் தருவாய்மதுரைப்பரமேட்டீ
படங்கொள்பாயும்பூவணையுந் தருவாய்கையிற்படுதலைகொண்
டிடங்கடோறுமிரப்பாயென் றேசுவார்க்கென்பேசுவனே.

தேனார்மொழியார்விழிவழிபேசெல்லாதவர்க்கேவீடென்று
நானாவேதபொருளுரைத்தாய் நீயேமதுரைநம்பரனே
நானாவேதப்பொருளுரைத்தாய் நீயேபாதிநாரியுரு
வானாயென்றுபிறர்பழித்தா லு(?)யேன்விடையேதறைவேனே.

வரதனாகியெவ்வுயிர்க்கு மாயாவிருத்திவலிபடக்கிச்
சரதமானவீட்டின்பந்தருவாய் மதுராக்கனிமுதலே
சரதமானவீட்டின்பந்தருவாய் வீடுபெறுவார்போல்
விரதயோகநிலைபடைந்தா யென்பார்க்கென்னான்விளம்புவனே.

என்று மதுரேசரைத்தியானித்து இப்படிஇசைப்பாட்டாலேகனிந்து பண்ணுதல் பரிவட்டணைமுதலாக இசைநூலிற்சொல்லியதொழில்களெட்டும் வார்தல்வடித்தல்முதலாகிய இசைக்கரணங்க ளெட்டுந்தோன்ற மண்ணுலகத்தார் செவிகளுக்கேயல்லாமல் விண்ணுலகத்தார்செவிகளுக்கும் இன்னிசையாகிய வமுதத்தைவார்த்தாள். இப்படி இடை பிங்கலை இயங்காமல் மூலாதாரந்தொடங்கி அசைந்துபோதுவானதொழிலால் பிரமாந்திரபரியந்தம் நடக்க இசைக்கு முள்ளான மிடறுவீங்காமலும், கண்களிமையாமலும், பல்தோன்றாமலும், புருவம்மேலேநிமிராமலும், கொடிறுதுடியாமலும்பாட எல்லாருங்கேட்டுக்குதூகலங்கொண்டு மெச்சத்தொடங்கும்போது பாண்டியன் முன்னே தான்கொண்டாடினவனையே கொண்டாடநினைக்கஅப்போதுசோமசுந்தரக்கடவுளருளாலே பாண்டியன் மனக்கோணல்தீர்ந்து பத்திரன்மனைவியே நன்றாய்ப் பாடினாளென்றுமெச்சி இலங்கைப்பாடினி கழுத்தின்மேலே பத்திரன் மனைவியைக்கொண்டுவந்து வையுங்களென்று சொல்லும்போது வித்வானாய் வந்திருந்தகடவுள் இந்தபத்திரன்மனைவி பாடலே ஆச்சரியம் ஆச்சரியமென்று கொண்டாடி சபையார்காண அப்பொழுதே மறைந்தருளினார். அதுகண்டசபையாரெல்லோரும் அதிசயித்தார்கள். பாண்டியன்பயந்து இதுவிடைமேலழகர் திருவிளையாடலென்றுதெரிந்து சபையாரும்பாண்டியனும் அடியவரன்பையும் கடவுளருளையும் ஆராய்ந்துபார்த்து ஆனந்தக்கண்ணீர்பெருகப் பேரின்பக்கடலில் மூழ்கினார்கள். உடனேபாண்டியன் கப்பலிரங்கிவந்தவள் பிடரியின்மேலிருக்கிறவளை இறங்கச்செய்து அவளுக்குமுன்னே ஆடையாபரணங்கள்முதலான பலவெகுமானங்கள்செய்து பின்பு கப்பலிரங்கி வந்தவளுக்கும் சிலவரிசைகள் கொடுத்து ராஜசபைக்குவந்து மீனாக்ஷிசுந்தரேசராகிய வித்துவானுக்கும் ஆபரணாதிகள் முதலான சிறப்புச்செய்து ராஜாக்கள் பலமெல்லாம் தெய்வபலத்தின் முன்னேநில்லா. அந்தத் தெய்வபலமும் மதுரேசன்முன்னேநில்லா என்றுசொல்லும் பழமொழி இந்தப்பத்திரன் மனைவியாலே விளங்கக் கண்டோமென்று அதிசயித்துக் கடவுளிடத்தில் விடைகொண்டு திருக்கோயிலைப்பிரதக்ஷிணம்வந்து ஆடல்பாடல்களுடனே தன்னரண்மனைக்குவந்துவாழ்ந்து பின்பு ராஜராஜராஜபாண்டியன் சுகுணபாண்டியனென்னும் புதல்வனைப்பெற்று வாழ்ந்திருந்தான்.

இசைவாதுவென்றபடலம்

முற்றிற்று.

சிவமயம்.

## நாற்பத்தைந்தாவது

# பன்றிக்குட்டிகளுக்கு முலைகொடுத்தபடலம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

இருளைக்கந்தரத்தில்வைத்தோன்றன்னிடத்தென்றுமன்பின்
றெருளைத்தந்தவட்குமாறுநதெரிவையையிசையால்வெல்ல
வருளைத்தந்தளித்தவண்ணமறைந்தனந்தாயாய்ப்பன்றிக்
குருளைக்குமுலைதந்தாவிகொடுத்தவாறெடுத்துச்சொல்வாம்.

இதன்பொருள்.

கருமைநிறம்பொருந்திய விஷத்தைக்கண்டத்திலேதரித்தருளிய சோமசுந்தரக்கடவுளிடத்தில் எப்பொழுதும் விடாது பேரன்புசெலுத்தியபாணபத்திரன்மனைவிக்கு விரோதியாக யாழ்ப்பாணத்திலிருந்து வந்த இசைப்பாடினியை வெல்லும்பொருட்டு அக்கடவுள் தமது திருவருளைத்தந்தருளிய திருவிளையாடலைச் சொன்னோம் இனி அந்தச்சோமசுந்தரக்கடவுள் தந்தையுந்தாயையுமிழந்து வருந்துகின்ற பன்றிக்குட்டிகளுக்குத்தாயாகித்திருவுருவங்கொண்டு அப்பன்றிக்குட்டிகளுக்கு முலைகொடுத்து அவைகளினுயிரைக் காத்தருளிய திருவிளையாடலைச் சொல்லுகின்றோம்.

முன்னே தேவர்களுக்காக விஷத்தையுண்டதற்குச் சாக்ஷியாகக் கழுத்திலே விஷத்தைத்தரித்தருளிய சோமசுந்தரக்கடவுளுடைய மதுரைக்குத் தெற்கே குருவிருந்ததுறையென்றொரு ஊருண்டு. அந்த ஊரில் தவக்குருவாகிய வியாழபகவானிருந்து தவஞ்செய்ய அவருக்காகவேண்டிய வரங்களைக் கொடுத்து சித்திரத்தேர் வலவனாகிய பிரமனும், லட்சுமிநாதனாகிய விஷ்ணுவும் வணங்கக்குருநாதவென்னும் பெயரினாலேவிளங்கத்தக்கது குருவிருந்ததுறை அந்த ஊரில் சுகலனென்றொருவேளாளனுண்டு அவன்மனைவி சுகலையென்பவள் மகாபதிவிரதையாய் வாழ்ந்துபன்னிரண்டு பிள்ளைகளைப்பெற்றாள். அந்தப்பிள்ளைகளைத்தாய்தகப்பன்மார் தங்களுக்குள்ள செல்வப்பெருக்கினாலே எவ்வளவும் தண்டியாமல் மிகுந்த அன்புகொண்டு வளர்க்குநாளில் அந்தத் தாயுந்தகப்பனுமிறந்துபோக அந்தப்பிள்ளைகள் எவ்வளவுமஞ்சாதவர்களாய் வேடருடனேகூடிக்காட்டிலே வேட்டையாடிவெயில்படாத ஒரு மரப்புதலின் கீழேயிருந்து தவஞ்செய்கிற தேவகுருவைக்கண்டு கைகளைக் கொட்டிச்சிரித்து கல்லும்மணலும்வாரி அவர்மேலே வீசினார்கள். அப்போது தவஞ்செய்கிற தேவகுருவானவர் அந்தப்பிள்ளைகளைக் கோபித்துப்பார்த்து நம்முடையதவத்துக்கு விக்கினஞ்செய்தார்களேயென்று மனநொந்துபிள்ளைகளே உங்கள் நல்லதொழிலைவிட்டு வேடத்தொழில் செய்கிறீர்கள். ஆனாலும் நீங்கள் உழுகிற தொழிலாளிகளானதினாலே பன்றியின்வயிற்றிலேபிறந்து குட்டிகளாய் தாயையும் தகப்பனையு மிழந்து அலைந்து துன்பப்படக்கடவீர்களென்று கடியசாபமிட்டார்.

பின்புபாபரூபிகளான அந்தப்பன்னிரண்டுபிள்ளைகளும்பயந்து சாபத்தையேற்றுக்கொண்டு ஐயாபெரியவரே எங்களுக்கிந்த சாபம் எப்போது தீருமென்று மிகவும்வேண்டிக்கேட்க அதற்குத்தேவகுரு குருநாதனுடைய திருவடிகளைத்தியானித்துத் தமதுகோபத்தைத்தணித்துக்கொண்டு பிள்ளைகளே உங்களுக்குமதுரேசரே தாயாய்வந்து முலைகொடுத்து உங்களைக்காப்பாற்றிப்பின்பு உங்களை மந்திரிகளாகச்செய்து பின்பு அழியாதவீடு தந்தருளுவாரென்று சாபத்திற்குவிமோசனஞ்சொல்ல, பின்பு அந்தப்பன்னிரண்டுபிள்ளைகளும் அந்தக்குருவிருந்ததுரைக்குப் பக்கமானகாட்டில் அநேகம் பன்றிகளுக்குத்தலைவனான பன்றியரசனது பெட்டைப்பன்றியின்வயிற்றில் வந்து குட்டிகளாகப்பிறந்து வளருகிறநாளில்மதுரையில் ராஜாதிராஜனென பாண்டியன்மதுரையைவிட்டு மேற்புறக்காடுகளெல்லாந்தேடி மான்வேட்டையாடுதற்கு மதயானைமேலேறிக்கொண்டு தன்சேனைகள்நெருங்கிவர அப்படியவன்வரும்போது மிருகங்கள் சஞ்சரிக்கிற இடங்கள்தெரிந்த வேட்டைக்காரர்கள்தோல் செருப்பிட்டக்கால்களுடனே மிருகங்கள்செல்லுகிற அடிச்சுவடுகண்டு புலால்நாறுகின்றவாயும் நெருப்பு விழிகளும்கொண்ட புலிகள்-பன்றிகள்-கடமைகள்-மான்கள் மேய்கின்ற கும்பல்கண்டோடிவந்து சொல்ல சிலவேட்டையாடிகள் சீக்கிரந்திலேபோய் அந்தக்கும்பலைச்சுற்றி வலைகட்டி அதிர்வெடிமுழக்கி நாய்கள்சுற்றிலும்நிற்க மிருகங்களைக்கலைத்து ஒருபுறத்திலேயொதிக்கி ஈட்டி வேல்கள்கொண்டு வீரர்கள்சூழ்ந்துநிற்க யானைமேல் பாண்டியன் ஏறியிருக்க-பம்பை-தவண்டை-சங்கு கொம்புமுதலிய பறைகளாலே திசைகள் செவிடுபடமுழங்கப் பலவிதங்களான பார்வைமிருகங்களை வைத்துக்காட்டி அந்தமிருகக்குரல்களுங்காட்டி புலி-கரடி-யானை - கடமை-மான்முதலியவைகள் மருண்டு கலங்கச்செய்து விற்களை வளைத்து வீரபாணங்களைப்பொழிந்தார்கள்.

அப்போது அங்கேகூடின மான்களெல்லாம் கால்கள்முறிந்தனதலைகளுடைந்தன, ரத்தங்கள்பீரிட்டன, வெள்ளைநிணம் வெளியேசரிந்து கைகளொடிந்து யானைகளிறந்தன, கரடிகள்-புலிகள்வாய்கள்கிழிந்து விழுந்திறந்தன, கடித்தபுல்லும் கிழங்குகளுமாக அவசரத்துடனேவந்து கண்ணிக்குள்ளகப்பட்டன, சிலசாயல்கண்டு பார்வைகளின்மேலே விழுந்தகப்பட்டன,சில கட்டின வலைக்குத் தப்பி அப்பால் நாய் கௌவிப்பிடிக்க அகப்பட்டன, சில வீரர்கள் கைவேல்களினாலே குத்துப்பட்டிறந்தன, பல இப்படி இறந்தவைகள்போக சிலகொலைவிலங்குகள் வலையைத்தாண்டி அங்கேநிற்கிற வீரர்களோடெதிர்த்து மீண்டு பார்வைவிலங்குகளோடுகூடிநிற்பன, சிலவீரர்கள் விட்ட அம்புகள் புலிகளைத்துளைத்துச்சென்றும், மான்களைஉருவியும், மலைக்கரடிகளைத்துளைத்தும் யானைகளைப்பொடித்தும், இப்படியாக மாண்டன, பல அம்புபட்டுத்தப்பி வலையைக்கிழித்துச்செல்கிறமானை நாய்கள்பிடித்துக்கொண்டுநிற்க, யானைகள்மேலேபட்ட வேலாலாகிய புண்வழியே மலைமேல் நெருப்பெரிவதுபோ லிரத்தங்கள் பொங்க நின்றன, சிலவீரர்களொலியும், பம்பைச்சத்தமும், கொம்புச்சத்தமும், அம்புகள்பட்டு விழுகிற விலங்கின் ஓசையும்தப்பி ஓடுகிறமான்மேலே தாவிப்பாய்ந்து நாய்குலைக்குஞ்சத்தமும்,

அந்தக்காடெல்லாம் நிறைந்து இடிமுழக்கம்போலாக, இப்படி பலமிருகங்க ளையுங்கொன்று பாண்டியராஜன் மேலைத்திக்கில் போகும்போது ஒருபன்றிக ண்டு தங்கள்பன்றி யரசனிருக்கிற காட்டுக்கோடி முன்னேநின்று ஓபன்றிரா ஜனே! கேளும்பாண்டியன் இந்தக்காட்டிலுள்ள மிருகங்களையெல்லாங் கொ ன்றுகொண்டு இதோவருகிறான் நீர் அசட்டைபண்ணலாமோவென்ன பன்றி யரசன் மிகுந்த மனோரதங்கொண்டு தன் பெட்டைப் பன்றியைப்பார்த்து ஓய் பெண்ணே! நான் இன்றுபாண்டியனுடனே சண்டைசெய்து வென்று வரு வேனோ? அல்லது சாவேனோ? இனி நீ உன்குட்டிகளைக் காத்துக்கொண்டு இங்கே சாக்கிரதையாயிருவென்றுசொல்ல அந்தப்பெண்பன்றி ஓ ஓ அங்கே உயிர்போனால் உடல்பிழைக்குமா? பாவிகளான நாமிருவரும்பெற்ற குட்டிக ளைக்கொடுத்த தெய்வபலத்தினாலே ஜெயங்கொண்டுவந்தீரானால் உயிர்வாழ் வேன் அன்றேல் நீர் இறந்தவிடத்திலேயே உயிர்விடுவேன், உடலையல்லாமல் நிழலிருக்குமா? நானும் கூடவருகிறேன், வாருமென்றுகுட்டிகளையும் சூழவி ட்டுக்கொண்டு பெட்டைப்பன்றி பின்னேபற்றிவர மகாவேகத்துடனே பன்றி யரசன் வீரர்கூட்டம்போல பலவகை முள்ளன்பன்றிமுதலான பன்றிக் கூட் டங்கள்முன்னே திரண்டுவர இந்தப்பன்றியரசன் கண்களிலே நெருப்புப்பொ றிகள்பறக்க முழுரோஷத்துடனே வருகிறபோது பாண்டியன் சேனைவீரர்க ள்விடாதமழை பொழிவதுபோல் அந்தப் பன்றிக்கூட்டத்தில் பாணவருஷ ங்களைப்பொழிய பாணங்கள்பட்டு முன்னே இரத்தவெள்ளம் பெருகின, அ ந்த இரத்தவெள்ளத்திலே உடல்கள்மிதந்தன, குடல்கள்சரிந்தன, எலும்பு கள்முறிந்தன, நிணங்களு மூளைகளும் சிதறின, பருந்து காகங்கழுகுகள்மே லேபடர்ந்து பறந்தன, உடல்வேறு பன்றிகளுயிர்வேறாயின, அப்போதுபன் றிகள் நெருப்பைப்போல கொதித்துப் பாண்டியன் சேனைகளில் சிலரைக்க டித்தும், சிலரை உதைத்தும், வாயிலே உதிரம்பெருகக்கொம்பாலேகுத்தியு ம்சிலநெஞ்சுநேரே பிளந்தும் பன்றிகள்கொல்ல, சிலவீரர்கள் காலொடிந்தா ர்கள். சிலர்தலையுடைந்தார்கள். சிலர் தோள்முறிந்தார்கள். சிலர் கையாயுத ங்கள்முறிந்தார்கள். சிலர் உயிர்போனார்கள்.

இப்படிபாண்டியன் சேனைவீரர்கள் சாவக்கண்டு பாண்டியன்மந்திரிக ள்சீறி இருப்புலக்கைசக்கரமுதலியவைகளைக்கொண்டு அடித்து நறுக்கியும், குத்தியும், வெட்டியும், குறைத்தும், துணித்தும், பலவகையாகக் கொன்று தொலைக்க அதெல்லாங்கண்டு பெண்பன்றியானது தனது தலைவனை பன்றி யரசனைப்பார்த்து ஓய் தலைவனே? இப்போது நாம்முன்னே அனுப்பின பன் றிக்கூட்டங்களெல்லா மிதோ கொஞ்சக்காலத்திலிறந்தழிந்தன, நாமினிசெ ய்யத்தக்கதென்ன கிடக்கிறது இனிநாம்வீணே இறந்துபோகாமல் தப்பிப்பி ழைத்தோடிப்போவதே நல்லகாரியமென்று வேண்டிச்சொல்ல, அதுகேட் டுப் பன்றியரசன் சாவதற்கஞ்சாமல் (நுண்ணறிவுடையவராய் நூலொடுபழ கினும் பெண்ணறிவென்பது பெரும்பேதமைத்தே) ஆதலால் உன்னுடைய அறிவுக்கேற்றபடியே சொன்னாய், மானமுள்ளவர்கள் போர்க்குப்பின்வாங்கி னால் குற்றமானபழிப்பலவோ? இன்னும் இரண்டுசிங்கங்கள் தங்கக்கிடக்கிற நீர்த்துறையில் ஒருபன்றிவந்து நீர்குடித்துமீளும், ஒருபன்றியிருக்கிற நீர்த்

துறையில் வீரத்திலிருந்த சிங்கம்வந்து தண்ணீர்குடிக்கப் பயப்படும், அப்படிப்பட்ட வீரவுறுதிகொண்டகுலத்திலே பிறந்தேனை நீ றூலேஇந்தவேப்பமாலையணிந்தபாண்டியனுடைய வீரத்தினையடக்கி என்கீர்த்தியை எங்கும் பரவச்செய்ய வல்லேனேயல்லது மடிவேன், அழிவது பூதவுடம்பே யல்லது புகழுடம்பழியுமோ நீசும்மா இங்கேதானே நில்லென்றுதனதுபெட்டுப்பன்றியைநிறுத்தி மற்றைப்பன்றிகளெல்லாம் என்காற்புறத்தில்நின்று பாண்டியன்சேனைகளைக் கொல்லவேண்டுமேயல்லது ஓடக்கூடாது என்று சொல்லிப் பாண்டியா! ஓடிப்போகாதைநில்லென்றுகொதித்துவந்து நிலத்தைக்கிண்டிப் பள்ளமாக்கி அதிலிருந்து கிளம்புறதூளியினாலே ஆகாசமெல்லாமறையத்தான் தனியேவருகின்ற டன்றியரசனைப் பாண்டியன்பார்த்து அதன் வீரத்தை மிகவும் புகழ்ந்துகொண்டாடி வில்லைவளைத்துப் பாணங்களைப்பொழிந்தான் அப்போது பன்றியரசன் பாண்டியன்விடுகிற பாணங்களைப்பறித்துச்சிலபாணங்களைக் காலாலேதேய்த்தும், சிலபாணங்களைமுறித்தும், சிலபாணங்களை வாலாலேவீசியுதிர்த்தும், இப்படி சின்னபின்னம்பண்ணுவதைபாண்டியன் கண்டு நாணித் தன் யானைக்கையிலே இருப்புலக்கைபைக்கொடுத்துவர அது கண்டு இடியேறுபோலேசீறிப் பன்றியரசன் அந்த யானையைக்கொல்ல நினைத்து அதன்கையை வாழைத்தண்டுபோல ஒடியச்செய்து தன் கொம்பாலே குத்திச் சிதைத்துக்கொல்ல உடனே பாண்டியன் ஒருதேர்மேலே பாய்ந்தேறிச் சக்கரத்தைச் சுழற்றி அதன்மேலேவிட்டான் அந்தச்சக்கரத்தைப்பன்றியரசன் தடுத்துவிட்டு மிகுந்தவேகத்துடனேபாய்ந்து அவனேறினதேரை யுடைக்கப் பாண்டியன் வேறே குதிரைமேலேறி வேலாயுதத்தைச்சுழற்றும் போது பன்றியரசன் அவனேறினகுதிரையின்பின்னேசென்று பாய்ந்துகுடல்சரியவும், ரத்தமொழுகவும், கொம்பால்குத்திக் குதிரையைக் கொல்ல பாண்டியன் மனம்பொறுமல் கீழேகுதித்துத் தன்கையிலுள்ள இரும்புத்தடியாலே அந்தப்பன்றியரசன் தலைமேலே ஓங்கியடிக்கப் பன்றியரசனிறந்து விமானமேலேறி மன்மதாகிருதியாய்த் தேவர்கள்வியந்து பூமழை பொழியச் சுவர்க்கலோகத்திற்போய்த் தேவகானங்களைக் கேட்டும் அமுதம் புசித்தும் தேவரம்பைகள் போகசுகமும் அனுபவிக்கலானான். பின்புபெண்பன்றி எனதுநாயகன்சாக நான்கண்டிருக்கலாமோ? வெல்லாவிட்டாலும் நானும்கூடச் சாகிறேனென்றுகோபித்தெதிர்க்க, அதுகண்டு அரசர்கள் பெண்மிருகத்தைக்கொல்வது நீதியன்றென்று விலக்க, வீரர்களுக்குத்தலைவனாஈசருச்சரனென்பவன் அத்துடனே போர்செய்யவளைந்து வெகுதேசகாலம்போராடப்பெண்பன்றி மிகவுஞ் சினந்து அந்தச்சருச்சரனாகிய வேடவீரனைமுட்டிக்கீழே தள்ளிக் கொல்லும்போது அதன்தன்கையிலிருந்த இரும்புத்தடியாலே அதன்தலைமேலே யோங்கியடித்து அதைக்கொன்று தானும்அத்துடனேவீரசுவர்க்கம் சேர்ந்தான்.

பின்புபாண்டியன் மதுரைபோய்ச்சேர்ந்தான். அந்த ஆண்பன்றி விழுந்து ஒருமலையாய் இன்னமும் பன்றிமலையென்று விளங்குகின்றது அந்தமலையில் தபோதனர்கள் அளவில்லாதபேர்கள் மோக்ஷமடையத்தவஞ்செய்கிறார்களென்றுசொன்ன அகஸ்தியமகாமுனிவரைப்பார்த்துகேட்ட முனிவர்கள்

ஐயாமகாரிஷியே, அறிவில்லாத பன்றிவடிவா யிருக்கிற மலையிலேமுனிவர்க ளிருந்து தவஞ்செய்வது என்னகாரணமென்ன? அதற்கு அகஸ்தியமுனிவர் சொல்லுகின்றார் கேளுங்கள் முனிவர்களே! முன்னாளில் மன்மதனபோலவி ளங்குகின்ற ஒருவிச்சாதரன் புலத்தியமகாமுனிவர்செய்கிறதவத்துக்கு விக் கினமாக வீணையிசை பாடினான், அதைக்கேட்ட புலத்தியமகாமுனிவர் அவ னைப்பன்றியாகச்சபித்தார். அதற்கு அவன்பயந்து ஐயாமுனீந்திரரே? என க்கு எப்போது இந்தச்சாபம்தீருமென்று கேட்க முனிவர்ராஜாதிராஜனை பாண்டியன்வேட்டையாடவந்து பலமிருகங்களையுங் கொன்று உன்னையுங் கொல்வான்பின்புஇந்தவடிவைப்பெறுவாயென்று சொன்னார் அவர்சொன்ன படியே அந்தவிச்சாதரன் பன்றியாய்ப்பிறந்திறந்து பழையவடிவைப் பெற் றான். ஆதலாலே அந்தப்புண்ணியன் உடல்கிடந்தபடியே மலையாய் அதிலே பெரியோர்களெல்லாரும் வாசஞ்செய்கிறார்கள், மதுரேசராகிய சோமசுந்தர க்கடவுளு மங்கேவிரும்பியிருக்கிறார் என்று முனிவர்கள்கேட்ட கேள்விக்கு மறுமொழிசொல்லி இப்பால் அந்த ஆண்பன்றியையும்பெண்பன்றியையும் கொன்றவிடத்திலேயே அவர்கள்போட்டுவிட்டுப் போனபின்பு பன்னிரண்டு குட்டிகளும் திகைத்துத் துன்புற்றுத் தாயென்று இன்னுமொருபன்றியின் பின்னே ஓடும், நல்லநிழலைத்தேடியலையும், பால்குடிக்கபசியுந்தாகமுமிருந்து உபத்திரவப்படும், வெயிலாலே வெதும்பும், இப்படி இந்தக்குட்டிகள் படும் பாட்டை யாராலேசொல்லிமுடியும், அப்போது மீனாட்சிசுந்தரேசர் தமதிச் சைப்படி விமானமேல் வந்தவர் கண்டிரங்கி அந்தக்குட்டிகள் துன்பந்தீர்க்க வெண்ணி அன்புடையதாய்ப்பன்றியின் வடிவுகொண்டுகிட்டிவரகுட்டிகள் கண்டு தந்தாயென்றுகிட்டிமுட்டிமொய்த்துஅதன்முதுகின்மேலேறி எட்டி எட்டிக்கால்களாலுதைத்து நிலத்தைக்கிண்டித்துத் துள்ளிகுதித்து மீண்டு திரும்பி இப்படிப்படுகின்ற குட்டிகளைப்பார்த்துப் பன்றிகாணுததாய்ப்பன் றியானது தன்மயிர்ச்சிலிர்த்துத் தழுவிமோந்து முலைகுடிக்கச் செய்து அந் தக்குட்டிகளுக்கு மிகுந்தபலமும், வீரமும், ஞானமும், பெருமையும், நல்ல குணங்களு முண்டாகச்செய்து முகமாத்திரம் பன்றி முகமாகவும் உடம்பெ ல்லாம் மனிதவடிவாகவுஞ் செய்து (கங்கைநாயகன் கடவுளர்நாயகன் கயற் கண்-மங்கைநாயகன் கருணையாந்திருவுருமறைந்தருளினர்) ஆகையால் அவ ரே அறிவில்லாத பன்றிவடிவாகி அறிவுண்டாகச்செய்வாரானால் இனிநமக்கு த்தாயுந்தந்தையுமாய்க் காக்கவல்லவரவரேயென்று பின்னும் சொல்லுகிறார்.

பன்றிக்குட்டிகளுக்கு முலைகொடுத்த படலம்

முற்றிற்று.

---

சிவமயம்.

நாற்பத்தாறுவது

# பன்றிக்குட்டிகளை மந்திரிகளாக்கியபடலம்.

கலிநிலைத்துறை.

தந்தைதாயிழந்தலமருங்குருளையைத்தாயாய்
வந்துநாயகன்முலைகொடுத்தருளியவகையி
தந்தவாறிருமைந்தருமந்திராகி
யெந்தையார்சிவபுரம்புகுந்திருந்தவாறிசைப்பாம்.

இதன்பொருள்.

தந்தையையுந் தாயையுமிழந்து வருந்தியிருந்த பன்றிக்குட்டிகளுக்குச் சோமசுந்தரக்கடவுள் தாயாகத் திருவுருவங்கொண்டெழுந்தருளி முலைகொடுத்தருளிய திருவிளையாடலிதுவாகும். இனி அந்தப் பன்னிரண்டு பன்றிக்குட்டிகளும் (பாண்டியராஜனுக்கு) மந்திரிகளாயிருந்து (அரசு செலுத்திப் பின்பு) எமது பெருமானாகிய பரமேஸ்வரன் எழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீமஹா கைலாசத்திற்குப் புகுந்து சிவகணநாதராக விளங்கிய திருவிளையாடலைச் சொல்லுகின்றோம்.

முதற்பெருங் கடவுளாகிய பெருமான் அவ்வாறு திருவுருமறைந்த பின்பு அந்தப்பன்னிரண்டு பிள்ளைகளும் பன்னிரண்டு சூரியர்களுங் கூடினாற்போல அந்தப்பன்றிமலையிலே எல்லாங்கற்றுணர்ந்து பலகலைகளிலும் வல்லவராய்க்கூடியிருந்தார்கள். அவர்களப்படியிருக்குங்காலத்தில் கடவுளருள் எல்லாவுயிர்க்கும் பொதுவா யின்பந்தருமென்பதை எல்லாருந்தெளிய அங்கயற்கண்ணம்மையானவள் தன்மணாளரான சோமசுந்தரக் கடவுளைப்பார்த்து சுவாமி! உலகத்திலே மிருகங்களிலே கெட்ட அறிவில்லாத மிருகமாகிய இந்தப் பன்றிக்குட்டிகளுக்குத் தாயாய் முலைகொடுத்து விலங்கறிவைப் போக்கி நல்லறிவருளினது என்னகாரணத்தினாலேயென்றுகேட்க அதற்குச் சோமசுந்தரக்கடவுள் பெண்ணே! எல்லாவேதங்களும் ஆகமங்களும் என்னைச் சகலசீவதயாபரனென்று சொல்லுகிறதினாலே எனக்குச் சேதனங்களென்றும், அசேதனங்களென்றும் வேறுபாடில்லை அவ்விரண்டும் பொதுவாகையாலே தாயையிழந்து உதராக்கினியான பசியாலேவெந்து வெயில் உடம்பெல்லாஞ்சுடக் காட்டிலேகிடந்துதீய்கிற பன்றிக்குட்டிகளுக்கு மனமிரங்கித் தாயுமாகிப் பால்கொடுத்தோம் அதனால் அளவில்லாத வீரமும் பலமும் நல்லவித்தையும் ஞானமும் பெற்றார்கள். இனி அந்தப்பிள்ளைகள் நம்முடைய பாண்டியனுக்கு மந்திரிகளாகி அநேகநன்மைகளைச்செய்து பின்பு போக்குதற்கரிதான மும்மலங்களையும் போக்கிக்கொண்டு நம்முடைய சிவகணங்களோடு வந்து சேருவார்களென்று நாயகிக்குவிடைசொல்லி அன்றிராத்திரியே பாண்டியன்

கனவிலேவந்து பாண்டியனே? சொல்லக்கேள் இந்தப்பன்றிமலையிலே பன்னிரண்டுவீரர்கள் பேரறிவுடையவர்களாக விருக்கிறார்கள். அவர்களை உனக்கு மந்திரிகளாக வைத்துக்கொள்ளென்று சிவபெருமான் சொல்லியருள, பாண்ண்டியராஜன் அதிக சந்தோஷங்கொண்டு சூரியோதயமானவுடனே தன் மந்திரிகளுக்குத் தெரியச்சொல்லி அந்தப் பன்றிவீரர்களைக் கூட்டிக்கொண்டு வாருங்களென்ன, உடனே மந்திரிகள் அந்தப் பன்றிமலைக்குப்போய் அவர்களைக்கண்டு பாண்டியராஜனைக்காண நீங்கள் வரவேண்டுமென்றுவேண்ட அவர்களும் பாண்டியன்சமுகம்வந்து கூடினார்கள். அப்படி வந்தவீரர்கள் பாண்டியனை வணங்கி நிற்க அவர்களைப் பாண்டியன்பார்த்து மிகவும் அதிசயானந்தங்கொண்டு சோமசுந்தரக்கடவுளருளின்படியே அவர்களுக்கு மந்திரித்தனங்கொடுத்துப் பின்னும் பலவரிசைகளுங்கொடுத்து முன்னே பழையவர்களான மந்திரிகள் பெண்களைவிசாரித்து விவாகங்களுஞ்செய்வித்து இது மிகவும் அழகிதென்று கொண்டாட நடத்தினான் அந்தப் பன்றிவீரர்களும் பாண்டியனுக்கு கண்ணும் கவசமும்போலநடந்து பன்னிரண்டுடலுக்கு ஒருயிர்போல மனவொருமையாய் ஐந்தலைநாகம் விழுங்குமிரைபோல ஒருதன்மையாய்ப் பொருள்வழியைத்தெரிந்து அரசனுக்கிட்டிப் பாண்டியனுக்குக் கல்வியைத்தருகின்ற ஞானம்போல மகிழ்வுண்டாக, பாலுந்தேனும்போல மதிநுட்பமும் நூல் வல்லமையுங்கொண்டு பகைவரு மனங்களிக்கப் பேசும் சொல்லில்வல்லவராய் பிறர்வாய் நுண்பொருளுணர்ந்து அரசனால் மதிக்கப்பெற்றோம். பழைய மாறேமென்று இருமாப்படையாமல் குற்றேவலாளிகள்போல மிகவு மஞ்சியொடுங்கி அரசன்வேண்டினதைத் தங்களுக்குவிடமாகவெண்ணி அகலாதணுகாது தீக்காய்வார்போல் அரசனிழல்போல எதுசொன்னாலுந் தடை சொல்லாமல் அபராதப்பொருள் பகைவரை வென்றுகொள்ளும்பொருள்கள் இவைகளில்லாமல் விளைநிலத்து வாரப்பொருளே ஈட்டும் பொருள்களாகச் சம்பாதித்து அரசன்மனக்கருத்தைக் கண்ணாடிபோலத் தங்களுள்ளே தெரிந்துகொண்டு அதுநீதியானாற் செய்தும் அல்லவானால் உயிருக்கானி வந்தாலும் செய்யவொண்ணாராய் இப்படி நடக்கிற பன்னிரண்டுபேர்களும் தானமும் தருமமும் புகழும் பாண்டியனுக்கு வளரச்செய்து திக்குவிஜயங்களும் பண்ணி பின்பு பரமேஸ்வரன் எழுந்தருளியிருக்கின்ற சிவபுரம்போய்க் கணநாதருடனெகலந்து நிலையாக வீற்றிருந்தார்கள். பாண்டியனும் மேலான பதவியடைந்தான்.

பன்றிக்குட்டிகளை மந்திரிகளாக்கியபடலம்

முற்றிற்று.

---

உ

சிவமயம்.

## நாற்பத்தேழாவது

# கரிக்குருவிக்குபதேசஞ்செய்தபடலம்.

கோச்சகக்கலிப்பா.

வரிக்குருகிப்பத்திரற்குப்பலகையிட்டமரிகண்ட
னரிக்குருளைவடிவானவடல்வீரர்க்கரசன்பார்
பரிக்குமமைச்சியலளித்தபரிசுரைத்தாம்பசுபதியாந்
கரிக்குருவிகுருமொழிகேட்டருளடைத்தகதைபகர்வாம்.

இதன்பொருள்.

பாணபத்திரரது பாடலுக்குருகி அவருக்குப் பொற்பலகையிட்டருளியசோமசுந்தரர் பன்றிக்குட்டிகளுருவமடைந்தசுத்தவீரர்களைபாண்டியனிடத்தில் அமைச்சுரிமைதாங்கி உலகத்தைப்பரிபாலிருக்கும்படி அருள்செய்த திருவிளையாடலைசொன்னோம். இனி, பசுபதியாகிய சோமசுந்தரர் ஞானோபதேசஞ்செய்ய கரிக்குருவியொன்று அவரது திருவருள்பெற்ற மகிமையைச் சொல்வாம்.

பின்பு சுகுணபாண்டியன் கடலாற் சூழப்பட்ட வுலகமெல்லாம் தன் ஒருகுடைநிழலிலேவாழ அரசுசெலுத்திவருநாளில்முற்காலத்திலே ஒருவன் மிகவுந் தருமங்களையேசெய்துதன்னாலே தள்ளப்படாத ஒருபாவத்தைச்செய்து அந்தப்பாபபலத்தினாலேவந்து அசேதனமான ஒருகரிக்குருவியாய்ப்பிறந்து காகமுதலான பறவைகளெல்லாங்கொத்தி யமவாதையைப்போலதுன்பஞ்செய்ய ரத்தஞ்சிந்துகிற தலையுடனே பறவைகளுக்கெல்லாம் எளிய பறவையாய் அப்பறவைகளாலே உண்டாகின்ற துன்பத்துக்காக பட்டணங்களிலே சஞ்சரிக்கப்பயந்து காட்டிலேபோய்நடைவழியிலே ஒருபுறத்திலேநிற்கிறமரத்தின்மேலிருந்து நாணிச்சோம்பி நெடுமூச்சுவிட்டிருக்கும்போது ஒருவன் விபூதிருத்திராக்ஷங்களணிந்து உள்ளும்புறம்பும் பரிசுத்தனாய் கையிற்பிடித்தகுடையுடனே தீர்த்தயாத்திரைசெல்லுகிறவனாய் அந்தமரத்துநிழலிலேவந்தான். அப்படிவந்தவன் அங்குள்ள சிலரைப்பார்த்து எல்லாருக்கும் பேறுதருகின்றதலம்தீர்த்தம்-மூர்த்திகளாகியமதுரை பொற்றாமரைசுந்தரேசர் என்றுமூவகைச்சிறப்புமுள்ளது உலகத்திலெங்குமில்லை மற்றையிடங்களிலே ஒவ்வொன்றே சிறந்தது இந்தமூவகையாலுஞ்சிறந்தது மதுரையேயல்லாமல் வேறெங்கேயுண்டு ஆதலால் இந்தமதுரேசர் அன்பர்க்கெளியவராய் நினைத்தவரங்களெல்லாம்வருபிறவிக்கேண்ணாமல் இப்பிறவியிலேதருதலாலே எல்லாக்கடவுளுக்கும் சோமசுந்தரக்கடவுளே அதிகரென்றான். அதுகேட்டு கொம்பிலிருந்த கரிக்குருவி ஞானம்பெற்று தான்பட்சியாய்ப்பிறந்ததும் அப்படிக்குப்பிறந்த காரணமுந்தெரிந்து இனி இந்தச்சென்மத்தை நீக்கவேண்டுமென்றெண்ணி இங்கே இந்தப்புண்ணிய புருஷன்சொன்னதே உறுதியென்றுகொண்டு அந்தக்காட்டைவிட்டு மதுரைப் பொற்றாமரைத் தீர்த்தத்திலேவந்து ஸ்நானஞ்செய்து மீனாக்ஷிசுந்தரேசரை வலஞ்செய்து மனத்தாலேதொழுது அர்ச்சிக்க இப்படி மூன்றுநாள்கழிந்தபின்பு மீனாக்ஷியம்மையார் சுந்தரேசுரரவணங்கி எதிரேநோக்கி சுவாமி! இந்தக்கரிக்குருவி யிங்கேவந்துசேர்ந்ததென்ன காரணமென்றுகேட்க, கடவுள் அதன்வரலாறெல்லாந் தெரியச்

சொல்லி பத்தி நியமம் பூண்ட அந்தப்பக்ஷியின்மேலே தமது கிருபாதிருஷ்டி கொண்டுபார்த்து முன்னே மார்க்கண்டேயருக்கு நித்தியத்துவங்கொடுத்து யமனைவென்றசத்தியஞானமிர்த்பஞ்சயத்தினையுபதேசஞ்செய்தருளினர். அப்படி ஒப்பில்லாத சோமசுந்தரர்சொன்ன மந்திரத்தைகேட்டவுடனே சிற்றறிவுபோய் தனதுதுன்பமெலாந்தீர்ந்து சிவபெருமான் திருவடிகளை தியானித்து

எண்ணிலாவுயிர்க்கிறைவபோற்றிவான்
றண்ணிலாமதிச்சடிலபோற்றியென்
புண்ணியப்பயன்போற்றியங்கயற்
கண்ணிநாதநின்கருணைபோற்றியால்.

தெளிதலின்றியேசெய்ததீமையால்
விளியுமென்னையுமாளல்வேண்டுமோ
வெளியரெங்குளாரென்றுதேர்ந்துதேர்ந்
தளியையாவதுன்னருளின்வண்ணமே.

உம்மைநல்லறமுடையசீர்மையா
லிம்மையிம்மனுவியம்பிஞயிது
வம்மைநன்னெறிக்கேதுவாதலான்
மும்மையுந்நலமுடையமொய்ம்பினேன்.

என்றுதுதித்து எம்பெருமானே? ஆனாலும் எனக்கொருகுறையுண்டு அதென்னவென்றால், கெட்டபறவைகளெல்லாமென்னை வாதைப்படுத்தினதினாலேயுண்டாகிய மானமும் எல்லர்ப்பக்ஷிகளுக்கும் எளிமையுங்கொண்டேன் ஆகையினாலே என்மானத்தைக்காத்து ரக்ஷிக்கவேண்டுமென்று கரிக்குருவி சொல்ல, அதைச் சோமசுந்தரக்கடவுள்கேட்டு நீ அஞ்சவேண்டாம், இனி உன்னைவாதித்த பக்ஷிகளுக்கெல்லாம் வலியை ஆவாயென்று வரங்கொடுக்க அதற்குக்கரிக்குருவி கடவுளைவணங்கி சுவாமி அடியேனுக்கு இன்னுமொரு வரம்வேண்டும் அதாவது தேவரீர்என்னைவலியனுவாயென்றுசொன்னது என் குலத்துக்கெல்லாம்வலியன் என்பதுண்டாகவேண்டும் இன்னும்தேவரீர் எனக்குபதேசித்தமந்திரத்தை உச்சரித்து என்கலியும் தீரவேண்டும் என்றுகேட்க, கடவுள் கிருபையுடனே உனக்கப்படியே உண்டாகக்கடவதென்றுசொல்லி மூன்றெழுத்தாகிய அந்தமந்திரத்துக்குதெய்வம்-இருடி-சந்தம் இவைகளெல்லாம் தெரியச்சொன்னர். அப்போது அந்தக்கரிக்குருவிகுருவுபதேசம் பெற்றுத் தன்குலமெல்லாம் வலியனென்றுபெயர்கொண்டு உலகத்திலே நிலைபெறச்செய்து பின்புதானும் அந்தச்சோமசுந்தரக்கடவுளின் திருவடிநிழலைச் சேர்ந்துவாழ்ந்தது உலகத்திலே ஒருவன் சுகமேவாழ்ந்தால் அவன்பந்துக்களெல்லாம் சுகப்படுவார்களென்கிற பழமொழி இந்த ஒருகரிக்குருவியாலே அதன்குலத்துக்கெல்லாம் வலியனென்று பெயருண்டாய் விளங்கினது.

ஈசனடிக்கன்பில்லார்போலெளியாரில்லையாவர்க்கு
மீசனடிக்கன்புடையார்போல்வலியாரில்லையாவர்க்கு
மீசனடிக்கன்பின்மையினலெளிதாய்த்திரிந்தவிக்கயவா
ஈசனடிக்கன்புடைமையினல்வலிதாயிற்றேயெவ்வுயிர்க்கும்.

**கரிக்குருவிக்குபதேசஞ்செய்தபடலம் முற்றிற்று.**

உ

சிவமயம்.

நாற்பத்தெட்டாவது

# நாரைக்குமுத்திகொடுத்தபடலம்.

கலி விருத்தம்.

அத்திதந்தவிமானமழகியார்
பத்திதந்தபறவைக்குமந்திர
சித்திதந்ததிறனிதுநாரைக்கு
முத்திதந்தகருணைமொழிகுவாம்.

இதன்பொருள்.

அட்டகஜங்கள் தாங்கிய இந்திரவிமானத்திலெழுந்தருளியிருக்கின்ற சோமசுந்தரக்கடவுள் மிகுந்தபத்தியையுடையகரிக்குருவிக்கு உபதேசஞ்செய்தருளிய திருவிளையாடலிதுவாகும் இனி அம்மதுராபுரித்தலைவர் நாரைக்குமுத்திகொடுத்தருளிய திருவிளையாடலைச் சொல்லுகின்றோம்.

மிகுந்தநீர்வளம்பொருந்தியவையையாறுசூழ்ந்தபாண்டிநாட்டிலேதென்றிசையில் சத்திரமென்றொன்றுண்டு அதனிடத்தே தாமரைத்தடாகமொன்றுண்டு அத்தடாகமோ அதிக ஆழமுள்ளது அதிலுள்ள மீன்களையுண்டு கொண்டு சங்குகள்மிகுந்து முத்துகளைப்பெற்றுவளரும் அந்தத்தடாகத் தருகே வெகுநாளாய் வாழ்ந்துக்கொண்டிருந்ததொரு நாரை அந்தச்செங்கா நாரைக்குப் பிறவிப்பெருங்கடல் வற்றுங்காலமாக சிலநாள் மழையில்லாமல் அந்தத் தாமரையோடை நீர்வற்றிப்போயிற்று அப்படி நீர்வற்றவேநாரைக் கிரைகிடைபாமல் தான் தங்கியிருந்த தடாகக்கரையைவிட்டு மிகவும் பசித்துஇரைதேடியிளைத்து வேறேயொரு அநேகம்பெரியோர்கள் வாசம்பண்ணுகிறகாட்டிலேவந்துவிழுந்தது. அந்தக்காட்டிலே அநேகம் முத்தரான முனிவர்கள்சூழ பரிசுத்தம்பொருந்திய பேரின்பக்கடலிலே முழுகி மனமாசுதீர்ந்து சிவமயமான சத்தியத்தவமுனிவரென்பவர் வாசஞ்செய்யகூப்பிடுதூரவளவுசதுரமாகச்சுற்றும்படிக் கட்டுள்ளதாய் அலங்கிருதமான கட்டுக்கோப்புடனே குளிர்ந்தசத்தியாமாடமும், குளமும், அவ்விடத்தேயுண்டு இன்னும் சண்பகம்-பாதிரிவேங்கை-வஞ்சி-மகிழ்-குராமரா-செம்முருக்கு - மருதுமுதலான பலசாதி விருக்ஷங்களும் அங்கேசூழ்ந்திருக்கும், ஆனால் அந்தக்குளத்துக்குப்பேர் அதோதீர்த்தமென்றுசொல்லப்படும், அந்ததீர்த்தக்கரையிலே பசித்திளைத்துவந்த செங்காலுரையானது அமர்ந்து அந்தத்தீர்த்தத்திலே பெரியதபோதனர்களெல்லாரும்வந்து வந்து முழுகியெழும்போது அவர்கள் சடையோடுகூடந துள்ளிவிளையாடுகிற மீன்களைக்கண்டு அச்சோ? இந்தமகாமுனிவர்கள்திருமேனிகளைத்தூண்டுதற்கு இந்தமீன்கள் என்ன புண்ணியங்கள் செய்தனவோவென்றதிசயித்து இவ்வளவுயோக்கியதைகொண்ட இந்தமீன்களை நாம் தின்னலாகாதென்றுவெறுத்து அங்கே சும்மாபட்டினியேயிருந்தது அக்காலத்தில் அங்கேயிருக்கிற சந்நியாசிகளெல்லோரும் அந்தத் தீர்த்தத்திலே ஸ்நானஞ்செய்து நித்தியகருமாநுஷ்டானங்களெல்லா முடித்

துக்கொண்டு அந்தச்சந்தியாமடத்திலேயிருந்து முன்னே சுந்தரபாண்டிய னரசாண்ட சோமசுந்தரக்கடவுள் மதுரைபபுராணமாகியசாஸ்திர ஞாலோக்ஷ பந்தொடங்கிக் கடவுளருள்விளையாடல்களும் அந்தமூர்த்திதீர்த்தம தலப் பெருமைகளும் அன்பர்க்கெளியானென்றும், அவர்கள்சொல்லக்கேட்டு அங் கேயிருக்கு நாரையானது தனதஞ்ஞான நீங்கிப் பாசவினையவிழ்ந்து மெய்ஞ் ஞானந்தோன்றி சிவபரஞ்சோதியின் திருப்பாதத்தியானததினன்பு வாவெ ன்றிழுக்கவெழுந்து உடனே பரமேஸ்வரன் எழுந்தருளி யிருக்கின்ற மது ராபுரிக்குவந்து பொற்றாமரைத் தீர்த்தத்திலேமுழுகி தெய்வயானை தாங்கு கின்ற இந்திரவிமானத்தில் விளங்குகின்ற சோமசுந்தரக்கடவுளை வணங்கிப் பிரதக்ஷணஞ்செய்து கிருபாதிருஷ்டிதோன்றத் தெரிசித்து சந்நிதிமுன்னே யிருந்து கடவுளது கிருபாசொரூபத்தைத்தியானித்து இப்படிப் பதினைந்து நாளளவும் நியமந்தப்பாமல் பின்னும் அப்படியே நாரைபொற்றாமரைத்தீர்த் தத்திலே முழுகவேண்டி மதிலின்பக்கமாகவரும்போது பசியினாலே வெந்து இந்தத்தீர்த்தத்திலே துள்ளுகின்றவேல்வாள்போன்ற மீன்களைப்பிடித்துண் போமென்று கொஞ்சம் மனதிலேநினைத்துப் பின்னும் கடவுளருளாலே ஞா னந்தோன்றி ஐயோ இந்தத்தருமதீர்த்தத்தின் மீனையும் உண்ண எனக்குப் பசியுண்டாயிற்றே ஐயோ! எனக்கு இந்தப்பிறவி எக்காலந்தீருமென்று துக் கித்துப் பின்னும் சோமசுந்தரக்கடவுள் திருவடித்தியானத்திலே மனம்வை த்திருக்கும்போது தேவர்களும் வேதங்களுங்காணாதவராகிய கடவுள் அந் தநாரை நினைத்தவடிவாய் தன்முன்னேதோன்றி ஓ நாரையே! நீயெனக்கு மிகவும் பிரியவஸ்துவானாய் ஆகையாலே உனக்கிப்போது வேண்டியவர மெ ன்னென்ன, அதுகேட்டுச்செங்காலுறை வணங்கி சுவாமி! இந்தப்பிறவியை த்தீர்த்து உன்னடியார்கள் வாழ்கின்ற சிவலோகத்தை நான்சேரும்படிக்குத் திருவருள்செய்யவேண்டும் இன்னும் என்குலபறவைகளும் வேறுசாதி பற வைகளும் இந்தப்புண்ணியரூபமாகிய பொற்றாமரைத்தீர்த்தத்திலுள்ள மீன் களையுண்டால் எக்காலத்துந் தீராதபாவம்வந்து சம்பவிக்கும் ஆகையாலே எக்காலத்தும் இந்தக்குளத்திலே மீன்களில்லையாகச்செய்யும் வரமும் வேண் டுமென்ன, நல்லதென்று வெள்ளியம்பலவாணர் அந்த வரமிரண்டுந் தந்து மறைந்தருளினார், உடனே நாரையுஞ் சிவலோகமடைந்தது ஐவகை வாத்தி யங்களுமுழங்க விமானத்தின்மேலேறி நான்கு தோள்களும் மூன்று கண்க ளுமாய் பூமழைக்குள்ளே முழுகிப்போய் திருநந்திதேவர்கூட்டத்திலே யிரு க்கலாயிற்று அன்றுமுதல் இன்றளவும் பொற்றாமரைக்குளத்திலே மீன்க ளேயல்லாமல் நீர்வாழுயிர்கள் யாவுமில்லாமற்போயின, ஆனதினாலே இந் தநாரை தன்குலத்தும் வேறுபறவைகளுக்கும் நல்லகதி யடையச்செய்ததெ ன்றுபுகழலாமோ? கடவுளருளையேபுகழலாமோ! ஆனாலும்சிவனடியாரானா ல் அவர்களுக்கு அருமையான பொருள் ஒன்றுமில்லை பின்பு சுகுணபாண்டி யன் நீதியோடு அரசுசெலுத்திப் பின்பு சுவர்க்கமடைந்தான்.

நாரைக்குமுத்திகொடுத்தபடலம் முற்றிற்று.

கூடற்காண்டம் முற்றிற்று.

---

சிவமயம்.

திருவாலவாய்க்காண்டம்.

நாற்பத்தொன்பதாவது

# திருவாலவாயான படலம்.



அறுசீரடியாசிரியவிருத்தம்.

பாயுடையார்விடுத்தபழியழல்வழுதியுடல்சுரிப்பபதிகமோதுஞ்
சேயுடையாரணந்திளைக்குஞ்செவியுடையாரகலவிறந்ததிசைகளெட்டுந்
தோயுடையார்பொன்னிதழித்தொடையுடையார்விடவரவஞ்சுற்றுமால
வாயுடையார்புகழ்பாடப்பெறுவேமேல்வேண்டுவதிம்மனிதயாக்கை.

இதன்பொருள்.

ஈச்சம்பாயை ஆடையாகவுடைய சமணர்கள் (திருஞானசம்பந்தப்பிள்ளையார் எழுந்தருளியிருந்த திருமடத்தில்) வைத்த பழியையுடைய நெருப்பானது (அவர்களுக்குச்சார்பாயிருந்த) கூன்பாண்டியனது உடல்முழுதுஞ் சென்று வருத்தும்படிக்கு (செய்யனே திருவாலவாய்) என்னுந்திருப்பதிகமோதியருளிய அந்தத்திருஞானசம்பந்தப்பிள்ளையாரதுதேவாரத்திருப்பதிகங்களாகிய தமிழ்வேதத்தை ஆநந்தமாகக்கேட்டுச் சந்தோஷிக்கின்ற திருச்செவியையுடையவரும், விசாலம்பொருந்திய எட்டுத் திசைகளும் ஆடையாகவுடையவரும், பொன்போலும் நிறத்தையுடைய கொன்றைமலர்மாலையைத் தரித்தவரும், விஷம்பொருந்திய சர்ப்பத்தினால் சூழப்பெற்றதிருவாலவாயென்னுந் திருப்பதியை யுடையவருமாகிய சோமசுந்தரக் கடவுளது புகழாகிய திருவிளையாடலைப்பாடும் புண்ணியமுண்டானால் இந்தமானிட சரீரமானது இன்னும் மிகுதியாக விரும்பத்தக்கதாகும்.

## மீனாட்சியம்மையார்.

வேதநெடுமாலாதிவிண்ணுடார்மண்ணுடார்விரதயோகர்
மாதவர்யாவருங்காணமணிமுறுவல்சிறிதரும்பிமாடக்கூட
னாதனிருதிருக்கரந்தொட்டம்மியின்மேல்வைத்தகயனாட்டச்செல்வி
பாதமலரெழுபிறவிக்கடனீந்தும்புணையென்பர்பற்றிலாதோர்.

(இ-ள்) பிரமனும் விஷ்ணு முதலிய தேவர்களும், பூலோக வாசிகளும் விரதத்தையுடைய யோகியர்களும், பெரியதவத்தை யுடையவர்களும் மற்றவர்களுங்காணும்படி நான்மாடக்கூடலழகராகிய சோமசுந்தரக்கடவுள் புன்சிரிப்போடும் தமதிரண்டு திருக்கரங்களாலுந் தொட்டுஎடுத்து (திருக்கலியாணசமயத்தில்) அம்மியின்மேல் வைத்தருளிய ஸ்ரீ மீனாட்சித்தாயாரது திருவடித்தாமரையை எல்லாப்பற்றுகளையுந்துறந்தபெரியோர் தமதுபிறவிப்பெருங் கடலைக்கடக்குந்தெப்பமாகக்கொண்டு துதிப்பார்கள்.

இனிமேல் குதிரைகள் வந்துசேராவிட்டால் நாளைக்கென்ன சொல்லுவீர் நீரோ உம்மையடுத்த பந்துக்கள் சிநேகிதர்கள்சார்ந்தவர்கள் நல்லோர்கள்முதலானவர்களை ரட்சிக்கவேண்டும்படியான கருத்தில்லாதவராயிருக்கிறீர் நீர் செய்கிறசெய்கை உமக்கே நன்றாகக்கொண்டீரென்று எல்லாருஞ் சொல்ல அதற்குவாதவூரடிகள் கேளுங்கள் நாளுபந்துக்கள் சிநேகிதர்கள்-துன்பம்-இன்பம்-தேகாபிமானம்-பொருளாசை-கோபம்-கெருவம்-நல்வினை - தீவினை முதலான இவைகளெல்லாம் கற்றைவார்சடையான்கோலங்காட்டியாட்கொண்ட அன்றேவிட்டுவிட்டேன். ஆனால் இனியெனக்குத் தாய்-தகப்பன்-மாமன்-ஆசான்-பாட்டன் எல்லாம் சிவனே, நிராசையே மனைவி, உயிர்களே பிள்ளைகள், சிவனடியார்களேபந்துக்களாக எந்தையார்கருணைகாட்டி யென்னையாட்கொண்டவன்றே கொண்டேன் ஊரெல்லாஞ் சமைத்தசோறென்னதே கடல்சூழ்ந்த உலகமெல்லாம் பாயலே, கோவணமேகட்டும் வஸ்திரம், விபூதியேபூசுஞ்சந்தனம், உருத்திராட்சமே ஆபரணமாக நீரெல்லாஞ்சுமந்தவேணி நிருத்தனுட்கொண்டவன்றே எண்ணினேன். நான் இறந்தாலும் இன்றே இறக்கக்கடவது சாவாமலிருந்தாலு மிருக்கக்கடவது. பாண்டியன் தண்டித்தாலும் தண்டிக்கக்கடவது. வெகுமானஞ்செய்தாலும் செய்யக்கடவது. சுவர்க்கம் சேர்ந்தாலும்சேருகிறேன் நரகம்சேர்ந்தாலும்சேருகிறேன், சிவனை மறக்கமாட்டேன் பழவினைப்பயனை யார்தான் விலக்கிக்கொள்ளுவார்களென்று அவர்களைத்தடுத்து வார்த்தையாடிக் கொண்டிருந்தார்.

வாதவூரடிகளுக்குபதேசித்த படலம்

முற்றிற்று.

---

சிவமயம்.

## ஐம்பத்தொன்பதாவது

# நரிபரியாக்கிய படலம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

அரிகணைதொடுத்துவேழமட்டவன்செழியன்வாயிற்
றெரிகலையமைச்சரேற்றைத்தேசிகவடிவத்தீண்டி
வரிகழல்சூட்டியாண்டவண்ணமிவ்வண்ணமைய
னரிகளைப்பரிகளாக்கிநடத்தியவாறுஞ்சொல்வாம்.

இதன்பொருள்.

சமணர்கள் ஏவியயானையை அதற்குவைரியாகச்சிங்கமாகிய அஸ்திரத்தைத்தொடுத்துக்கொன்ற வீரராகிய சோமசுந்தரக்கடவுள் அரிமருத்தன பாண்டியனிடத்தில் முதன்மந்திரியா யெழுந்தருளியிருந்தவாதவூரடிகளைக் குருமூர்த்தமாகத் தோன்றித்தமது பாததாமரைகளைச் சிரசிற்சூட்டி ஆட்கொண்டருளிய திருவிளையாடலிதுவாகும். இனி அச்சோமசுந்தரக்கடவுள் தமதன்பராகிய அந்தவாதவூரடிகள்பொருட்டுக் காட்டிலேதிரிந்த நரிகளையெல்லாம் குதிரைகளாக்கிக்கொண்டுவந்து பாண்டியனுக்குச் செலுத்திய திருவிளையாடலைச் சொல்லுகின்றோம்.

இவ்விதமாக பந்துக்களாகிய பாசபந்தங்களையறுத்துப் பரிசுத்தராயிருந்த வாதவூரடிகளை மறுநாள் பாண்டியன்வரவழைத்து என் இன்னம் குதிரை ள் வரவில்லையென்ன அதற்குவாதவூரடிகள் இன்றுமுதல்மூன்றுநாளைக்குள்ளே குதிரைகள்வந்துசேரும் ஐயா அப்படிவருகிற குதிரைகளுக்கு வேறேபெரியலாயங்கள்கட்டவேணும் தண்ணீர்குடிக்கக்குளங்கள்தோண்டவேணும் பட்டணமெல்லாம் அலங்காரஞ்செய்யவேணுமென்றுசொல்ல அது கேட்டுப் பாண்டியனும் அப்படியேசெய்யவேணுமென்று உத்தரவுசெய்ய வேலைக்காரர்கள் குதிரைலாயங்கள் பெரிதாகக் கட்டிப் பட்டணமெல்லாம் அலங்காரஞ்செய்ய மண்வெட்டியாள்கள் மூன்று நாளைக்குள்ளே வேறே வாவிகளும் குளங்களும் வெட்டினார்கள். பின்புகெடுச்சொன்னமூன்றுநாளுங்கழிந்தபின்னும் பாண்டியன் இன்னும்குதிரைகள்வரக் காணேமேயென்று வாதவூரடிகளைக்கூப்பிட்டுத் தானே தண்டிக்கிறவனைக் கோபங்கொண்டு இவன் குதிரைவாங்கின தெங்கே என்றைக்குக் குதிரைகள்வருகிறதென்று தனக்குமுன்னேநின்ற சிலசேவகரைப்பார்த்து பெரியதிருடனை இவனைக் கொண்டுபோய்த்தண்டித்து நம்முடைய பொக்கிஷசாலையிலுள்ளபொருள்களெல்லாங் கணக்குப்பார்த்து எவ்வளவுங்குறையாமல் வாங்குங்கள் போங்களென்று உத்தரவுகொடுத்தான். அப்படிஅவன்உத்தரவுகொடுக்கவே பாண்டியன் கோபத்துக்குப்பயந்து முன்னேநில்லாமல் ஒருகையிலே கயிறுகட்டி வாதவூரடிகளை நடுவேவிட்டுப்புறத்திற் சூழ்ந்துகொண்டுபோய் தண்டவீரர்கள் ஓ மந்திரியே இனி எப்படிபணத்துக் கென்னவகை சொல்லுமென்று

கோபித்து அவரை நிற்கவைத்துத் தலைமேலே பெரிதான ஒருகல்லைச் சுமக்க வைத்து வாதிக்கவா தவூரடிகள் சோமசுந்தரக்கடவுளுடைய திருவடிகளைத் தியானித்துத் தலைமேலேற்றினகல்லுச்சுமையைச் சுமந்துக்கொண்டுநின்றார் அப்படி அவர்தாங்குகிறபாரத்தை அவரை அடிமைகொண்டாண்ட கடவுள் தாங்குகிறதினாலே வாதவூரடிகள் தமக்குக்கனம்தோற்றாமல்தாம்நிற்கிறவெ யிலிலே சிவனதுபாதநிழலாகநின்றார். அப்படிஅவர்நிற்கிறநிலையைத் தண்ட வீரர்கள்கண்டு இது ஏதோ மாயமாயிருக்கிறதென்று கொலைசெய்யவும் அஞ் சாத அத்தண்டவீரர்கள் மிகவுங்கோபங்கொண்டு வேதாந்தப் பொருளைத் தியானஞ்செய்துகொண்டு நிற்கிற வாதவூரடிகள் கையிலுங் காலிலுங்கிட்டி கட்டிநெருக்க அந்தக்கொடுந்தொழிலுக்கும்சலியாமல் சிவத்தியானமாயிரு ந்தார். அப்போது சூரியன் ஐயோ இந்தக்கொடிய தண்டகர்கள் இனிமிகவு ந்தண்டிப்பார்களேயென்று பார்க்கமாட்டாதவனாய்த் தன்னொளிகள் மழுங் கிக்கடலிலே முழுகி அஸ்தமித்தான்.

அப்போதுவாதவூரடிகளான தமதன்பருடையதுன்பந்தீர்க்கிறதற்கு சோமசுந்தரக்கடவுள் அவர்முன்னே எழுந்தருளினாற்போலச் செவ்வானந் தோன்றி அவர்மார்பிலணிந்தபன்றிக்கொம்புபோல இளஞ்சந்திரன் உதைய மாகிப் பிரமதேவனுடையதலைமாலைபோல நக்ஷத்திரங்கள் விளங்கதுன்பமா கிய சுழிகளையுடைய பிறவிக்கடலிலேமுழுகிக்கழிகிற பாண்டியனைதன்னை யுங்காக்கவல்ல சோமசுந்தரக்கடவுள் திருவடிகளைத் தியானித்து வழிபடுகி ன்றவாதவூரடிகள்பெருமைதெரியாமல்காவல்வசப்படுத்தின அந்தப்பாண்டி யன்பழிபாவம்போல எங்குமிருண்டது அப்படியிருண்டவுடனேவாதவூரடி கள் காலிலேவிலங்கிட்டுக் காவலாளர்கள் கண்களிலேநெருப்புப்பொறிசிதற தவத்தைக் காவலுக்குள் ளாக்கினாற்போலக் கோபங்கொண்டு தண்டித்துக் காவலறையிலே வைத்துக் கும்புகூடி எல்லாரும்வருத்தவாதவூரடிகள் அந்த ச்சிறைக்கூட்டத்திலே கிடந்து மாலுமயனுங் கீழுமேலுந்தேட நின்றவாது செம்பொன்மயமான திருவடிக்கமலங்களைத் தமக்குத்தெப்பமாகக்கொண்டு தமக்குநேரிட்ட துன்பக்கடலைக்கடக்கஇருட்கடலும்வற்றிவிடிந்தது. அந்த உதையகாலத்தில் அந்தமிலழகராகிய சொக்கலிங்கப் பெருமானையும் அங்க யற்கண்ணியையும் திருப்பள்ளியுணர்த்துதற்கு அடியார்கள்வந்து கூடிவந்த னைசெய்கிறசத்தமும் மங்கலசங்கத்தொனியும் நான்குவேதமுழக்கமும் வாத வூரடிகள் தமதுதிருச்செவிகள்நிரம்பக் கேட்டுக்கொண்டிருக்க அந்தச்சமய த்திலே போதவானந்தசோதியாகிய கடவுள் தமதுபரிசுத்தானமெய்யன்ப ருக்காக நாதமாகிய பேரிகைகள்முழங்க நரியாகிய குதிரைகள்மேலேறின வீரர்கள்சூழத்தாமும் வேதமாகியதாவுகின்ற பரிமேலேறிக்கொண்டுமதுரை வீதியில் இனிவருவதைத்தானுங்கண்டு தரிசிக்கஆசைகொண்டவன்போலத் தேர்மேல் சூரியனுதயமாயினான். அப்படிசூரியன் உதயமானவுடனே அங்க யற்கண்ணியுடனே திருப்பள்ளியெழுந்திருக்கின்றசோமசுந்தரனை கருணை க்கடல் விளங்குகின்ற இந்தவிமானத்தின் சிகரத்தைப்பார்த்துத் தமது கை களைக்குவித்துக் கண்களிலே நீரொழுக நாதனைப்பாடத் தொடங்கினார். எப் படியென்றால்.

எந்தாயனைத்துலகுமீன்றுயெச்தேவர்க்குந்
தந்தாய்செழுங்குவளைததாராய்பெருந்துறையில்
வந்தாய்மதுரைத்திருவாலவாயுறையுஞ்
சிநதாமணியேசிறியேற்கிரங்காயோ.

மூவாமுதலாய்முதுமறையாயம்மறையுந்
தாவாதசோதித்தனிஞானபூரணமாய்த்
தேவாதிதேவாய்த்திருவாலவாயுறையு
மாவார்கொடியாயடியேற்கிரங்காயோ.

முன்னுமுதுபொருட்குமுன்னுமுதுபொருளாய்ப்
பின்னும்புதுமைக்கும்பின்னுகும்பேரொளியாய்த்
தென்னுமதுரைத்திருவாலவாயுறையு
மென்னுயகனேயெளியேற்கிரங்காயோ.

மண்ணுப்புனலாய்க்கனலாய்வெளியாகி
விண்ணுயிருசுடராயித்தனையும்வேருகிப்
பண்ணுயிசையாய்ப்பனுவலாயெங்கண்ணுங்
கண்ணுனுயென்னுறுகண்காணுவாரென்கொல்லோ.

பொங்குஞுசினமடங்கல்போன்றுருத்துவெங்கூற்ற
மங்கும்புரியாவருந்துன்பத்தாழ்ந்துநான்
மங்கும்படியறிந்தும்வந்தஞ்சலென்கிலைபா
லெங்குஞ்செவியுடையாய்கேளாயோவென்னுரையே.

பூட்டியருட்பாசமிருபாதம்பொறித்துடலிற்
கூட்டியடியாருளகப்படுத்தாட்கொண்டருமை
காட்டியவோவின்றென்னைக்கைவிட்டார்வெய்யரெனை
யாட்டியொருக்குமிடத்தாரேன்றுகொள்வாரே.

ஊராருனைச்சிரிப்பதோராயென்றுன்னடிமைக்
காராயடியேனயர்வேனஃதறிந்தும்
வாராயரசன்றமரிழைக்குஃவன்கண்ணேப்
பாராயுன்றன்மையிதுவோபரமேட்டீ.

என்று எவ்விதமாக துதிக்கின்றவருடைய அழுகைச்சத்தம் கடவுளின் திருக்காதிலே இளம்பிள்ளை அழுமோசைபெற்றதாய் காதிலேபுகுந்தாற்போல நுழைபககேட்டுக்கூடற்கடவுள் அன்றைக்கேவாதவூரடிகளைச்சிறைக்கூடத்தைவிட்டு நீக்கத்திருவுள்ளங்கொண்டு திருநந்திதேவர்முதலான கணுதிபர்களைக்கூப்பிட்டு உடனே அவர்கள்வந்து சேவித்துநிற்கநாம் இன்றைக்கு தினம் ஆவணிமூலநக்ஷத்திரம் பாண்டியன்மிகவுங் கோபங்கொள்ளுமுன்னே அவனுக்குள்ள குதிரைகளெல்லாம் செலுத்த வேண்டும் ஆகையாலே நீங்களெல்லாருங் காட்டிலே சஞ்சரிக்கின்ற நரிகளையெல்லாஞ்சேர்த்து குதிரைகளாக்கி அந்தக்குதிரைகளை நடத்தும் வீரர்களாகி நீங்கள்முன்னே செல்லுவ

கள். நாமும் உங்கள்பின்னே ஒருகுதிரைவீரனுய்த்திருவுருவங்கொண்டு வருகிறோமென்றுவிடைகொடுக்க அந்த ஒப்பற்றகடவுள் இட்டருளிய ஆக்கினை கொண்டெழுந்த கணுதிபர்கள் தேவர்களும் அதிசயிக்க காடுகளிலுள்ளநரிகளையெல்லாந் திரட்டி வேகத்துடனே தாவுகின்ற குதிரைகளாகச் செய்து அந்தக்குதிரைகளை நடத்துகின்ற பாகர்களானர்கள்.

எப்படியென்றால் இடையிலே தூக்கிக்கட்டின செம்பட்டும் அதிலே செருகின சுரிகையாகிய பாங்கும், கால்களிலே செருப்பும் நெஞ்சிலே யிரும்புக்கவசமும் சினந்துபார்க்கிற கண்களும், திரிபுண்டரமணிந்த நெற்றியும் இடிபோல் அதிர்ந்துமுழங்குகின்றசிரிபபும், கொதித்துப்பொங்குகின்றகோபமும்கொண்டவர்களாய் வட்டமானகேடகமும் முதுகிலேகிடந்தசையக் கூர்மைபொருந்திய வாளேந்திய கைகளுமாகச் சிலர்வர, சிலர்தோமரஞ்சுழலக்கொண்ட கையினராய்வர, சிலர் முதுகிலே அம்புக்கூடுகட்டிக்கையிலேவில்லேந்திவர, சிலர்சிவந்த படாத்திலே போர்வையணிந்துக்கொண்டுவர, சிலர்பச்சைப்படாத்திலே சட்டையிட்டுக்கொண்டுவர, சிலர் மேகவண்ணப்பட்டிலே போர்வையணிந்துக்கொண்டுவர, சிலர்செம்பொன்னிறமான சட்டையணிந்துகொண்டுவர, அனேகம்பேர்கள் மயிற்குடை பிடித்துக்கொண்டுவர, அனேகம்பேர்கள் சாமரங்கள் குடைகளுடனேவர, அனேகம்பேர்கள் சாலர்க்குடைகள்பிடித்துக்கொண்டுவர, அனேகம்பேர்கள் முத்துக்குடைகள் தடித்துக்கொண்டுவர, இப்படிவருகிறவர்களிலே தருமம்-அருத்தம்-காமம்-மோக்ஷமென்கிற நான்கு புருஷார்த்தங்களும் நான்குகால்களாகவும், ஞானகாண்டம்கருமகாண்டம் ஆகிய இரண்டும் இரண்டுகாதுகளாகவும், காட்சியளவையைக்கடந்த ஒருமையானபரம் அபரம் என்கிற உணர்வே கண்களாகவும், அருமையான விதையே முகமாகவும், நிஷேதமே வாலாகவும், பலநூல்களே முதுகலங்காரமாகவும், மந்திரங்களே சதங்கைகள் கிங்கிணி மாலைகள்-ரத்தினங்கள்-ரத்தினச் சிலம்புகளாகவும், சூரியனும்-சந்திரனும் இருபுறத்தும் அங்கவடியாகவும் பெருமைபொருநதிய தாரகப்பிரமமந்திரமேகடிவாளமாகவும், புறச்சமயங்களான சேனைகள் தோற்றோடும்படி மூண்டுபோர்செய்து பகையைவெல்ல வல்லதாய் கடவுள் முகமாகிய லாயத்திலே தங்குவதாய் அண்டகோடிகளையெல்லாம் ஒருபிண்டமாக அடுக்கினதுபோலான முதுகின்மேலே உபநிடதமானசீனிகொண்டு பரிசுத்தமாய் விளங்குகின்றவேதமாகிய குதிரையின்மேலெழுந்தருளி வாதவூரடிகளுடைய கால்விலங்கைப்போக்குதற்காக எழுந்தருளுகின்ற சோதியானவர் அவர்க்கேயல்லாமல் பாண்டியன் பிறவியைப்போக்கவும், காலிலேவீரக்கழல்கட்டிவேதமாகிய உறையினின்று முருவினஞானமாகிய வாளானது புறத்திருளையும் போக்கிவிளங்கபிறக்கவேண்டினவர்கள் மறந்து மிங்கேவராதிருங்கள், அந்தப்பிறவி தீரவேண்டினவர்கள் விரைவிலே இங்கேவாருங்கள் தமதன்பரைப் பாண்டியன்தண்டியாமைக்கு வருகின்றபெருமான் உங்கள்பிறவியைத் தீர்க்க வருகிறுனென்பதுபோலக்குதிரைக்கால்களிலே சிலம்புகள்சத்திக்கவும், சுவாமி? கங்கையை உம்முடையமுடியின்மேலேமறைத்துவைத்திருக்கிறீர், அப்படியே எங்களையுமறை

த்து வைத்துக்கொள்ளுமென்று பெருமானைவேண்டிக் காவேரி துங்கபத்திரி முதலான நதிகளெல்லாம சூழ்ந்து பொங்கி விழுகிறதுபோல அந்தக் கங்கா நதியும் சாமரைகளும் புரண்டுவிழவும், பிரமதேவனுடைய நாவிலிருக்கின்ற சரஸ்வதி தேவியானவள் பார்வதி நாயகன் நான்கு வேதங்களே குதிரையாக அதன்மேற் கொண்டு வருகின்றானென்றும் தானொரு வெள்ளைக்குடையாகி மேலே பரவிவருகிறதுபோலே வெண்கொற்றக்குடை விளங்கவும், வேதங்களைக்கொண்டு சொல்லுகின்ற பதினெண் புராணங்களும் நாம் சொல்லுகின்ற கடவுளிவனே படைத்துக் காத்து அழிக்கிறவனுமிவனே இன்னும வேதங்களும் முறையிட்டுரைக்கின்ற பரமபொருள் இவனேயென்று வாய்விட்டுச் சொல்லுவதுபோலப் பதினெட்டு வாத்தியங்களு முழங்கவும், இப்படி நெருங்கின மாயக்குதிரைகளெல்லாம் மேற்குத்திசையைநோக்கி நடந்து வருகின்றன, அவைகளிநடுவே சோமசுந்தரக்கடவுளுடைய வேதக்குதிரையும் நடந்து வரும்போது அங்கு கிளம்பின தூளிகள் ஆகாசமும் திக்குகளும் மறைக்கக்கண்டு சூரியன் நாம் செல்லுகிறதற்கு வழி யெங்கேயென்று மயங்க நெருங்கின பலவாத்தியங்களினுடைய முழக்கமும் குதிரைகளினொலியும் வீரர்கள் சத்தமும், திசைகள் செவிடுபட வேதக்குதிரைமே லழகர் இன்னம் மதுரை அரைக்காத வழிதூரமென்ன எழுந்தருளினார்.

அதுகண்டபேர்கள் விரைந்து மதுரைக்கோடிவந்து அங்கே காவல் வசப்பட்டிருக்கிற வாதவூரடிகள் முன்னேவந்து சேவித்து மலர்ந்த சந்தோஷமுகத்துடனே ஐயா ராஜநீதிதவறாமல் நடத்துகின்ற மந்திரிகள் சிங்கமே பல நிறங்களைக்கொண்டு கடல் பொங்கி வருகிறதுபோல உள்ள குதிரைகளெல்லாம் திரண்டு வருகின்ற இந்நேரம் கோட்டைவாயிலுக்குள்ளே அவைகள் வந்துசேரும் ஆதலால் பாண்டியனுக்குப்போய் சொல்லுமென்ன அது கேட்டு வாதவூரடிகள் மேகத்துக்கு விலங்கிட்ட உக்கிரபாண்டிய குலத்தானிடமே சென்று ஐயா பாண்டியமகாராஜனே குதிரைகள் வருகின்றனவென்று சொல்ல உடனே பாண்டியன் வாயுவேகத்துடனே குதிரைக்கடல் வருகிறதென்று அணிந்த கங்கணங்கள்தெரிக்க உடம்புபூரித்து மனமகிழ்ந்து பெரிய விலைபெற்ற ரத்தின ஆபரணங்களும் வஸ்திரபூஷணங்களும் வெகுமானஞ்செய்து மந்திரியை மகிழ்வுடனே சந்தோஷப்படுத்தினான் அப்படிச் சந்தோஷப்படுத்திச் சிங்காசனத்தைவிட்டு எழுந்து தலைவாயலுக்குவந்து அங்குள்ள மணிமண்டபத்திலே ஒரு சிங்காசனத்தின்மே லிருந்துகொண்டு பெண்கள் சாமரங்கள் வீசப பெரியோர்கள் சூழ்ந்திருக்க குதிரைகளெங்கேவருகின்றனவென்று பார்த்துக்கொண்டிருக்கும்போது கடவுள் திருவிளையாட்டால் சிறிதுநேரம் குதிரைகள்வாராமல் தாமதமாகநிற்க அதைக்கண்டுசந்திரகுலத்துப் பாண்டியன் மனம் நாணி இது பொய்யென்று நினைத்து அருகே நிற்கிற தண்டவீரர்களைக் குறித்துச் சினந்து நோக்க அவர்கள் பாண்டியன் மனக்குறிப்புத் தெறிந்து மந்திரிகளுக்கு முதல்வரான வாதவூரடிகளை நெருக்கிக்கொண்டுபோய் எவ்வளவும் அஞ்சாமல் மிகவும் தண்டனைசெய்ய அப்போது வாதவூரடிகள் தமது சுந்தரபாண்டியனென கடவுளை நினைத்து அவரது ஸ்ரீபாதங்களை துதிக்கின்றார்.

பூவார்முளரிப்புத்தேளரியாநெறிதந்தாப்
பாவார்தென்சொற்பனுவன்மாலைப்பணிகொண்டாய்
தேவாதேவர்க்கரசேசிறியேனுறுதுன்ப
மாவாவென்னுவஞ்சேலென்னுபறனேயோ.

நெஞ்சேயுறையேசெயலேயெல்லாநினவென்றாப்
வஞ்சேபோனுமஃதேவின்றுவாராயோ
பஞ்சேரடியாள்பாகாகூடற்பரமேட்டி
யஞ்சேலென்னுவிதுவோவருளுக்கழகையா.

காவிநேருங்கண்டாநாயிற்கடையான
பாவியேனைப்பொருளாக்கொண்டென்பணிகொண்டா
யாவியோடிவ்வுடலுநினதேயன்றேவின்
றேவிவாளாதிருந்தால்யாரென்னுடையானே.

என்று துதித்தழுகின்ற வாதவூரடிகள்காதிலே பால்வேண்டிக்கத்துகின்ற இளங்கன்றின்காதிலே தாய்ப்பசுவின் கனைகுரலோசைவந்து புகுந்தாற்போல சின்னம்-காளம-காகளம் - முதலியவைகளொலிக்கு மோசைவந்து புகுதவும் செந்தூள்திசைகளெல்லாம் மறைக்கவுங்கண்டார். அப்போதுபாண்டியனுங்கூடக்கண்டு வாதவூரடிகளை வரவழைத்து அவர் எல்லாரும் வணங்கும் குலத்தினராசையாலே அவரிடத்திலே மெய்யன்புகொண்டு எங்களுடையராஜகாரியம் உம்மைப்போலே செய்யவல்லவர்கள் யாரிருக்கிறார்களென்று கொண்டாடிச்சொல்லி முடியாத சந்தோஷங்கொண்டு பேசிக்கொண்டிருக்கும்போது படர்ந்த இருட்படலத்தைக் கிழித்துக்கொண்டு தனதாயிரங்கிரணங்களுந்தோன்ற உதயமாகிற சூரியர்களையொத்தவர்களாய்ச் சிறந்த திருமேனிகொண்ட பாகர்களுடனே கடலினுரைபோலே வாய்நுரைதோன்ற மாயக்குதிரைகளெல்லாம் வந்தன அப்படிவந்த குதிரைகளைப் பாண்டியன் தன்குலத்திலுள்ளவர்களும் என்றுங்கண்டறியாத லக்ஷணங்களையுடைய குதிரைகளிவைகளென்று பார்த்து அச்சோ இந்திரனைப்போல ஆயிரங்கண் நமக்குண்டானாலும் பார்த்து முடியாதென்று மனக்குறிப்புடனே தானென்றும் சந்தோஷமென்றும் வேறுபாடில்லாமல் அந்தக்குதிரைகள் மேல்வந்த வீரர்களையெல்லாங் கண்டதிசயித்து இந்தக் குதிரைவீரர்களுக்கெல்லாம் தலைவர்யாரென்று தன்மந்திரியான வாதவூரடிகளைக்கேட்க எல்லாந் தெரியவல்லவராகிய வாதவூரடிகள் ஐயா எனக்கது தெரியாதென்றார். அந்தசமயத்தில் அண்டங்களெல்லாம் ஒருடலாகத் தாமே உயிராகி ரட்சிக்கப்பட்ட ஆனந்தமயமாகிய பரஞ்சோதியான சோமசுந்தரக்கடவுள் அந்த அண்டங்களைத் தாங்குகின்ற வேகத்தையுடைய வேதமாகிய குதிரையே தமக்கோராதாரமாகித் தம்மைத்தாங்கவும் ஒருகாலத்தும் அசையாதிருக்கின்ற தம்முடைய பாததாமரைகளசையவும் எல்லாருடைய ஆசாபாசங்களையும் நீக்குவதான கையிலே ஏறின குதிரைக்கடிவாளமாகிய பாசத்தைப்பற்றிக்கொண்டு பாண்டியனுக்கு முன்னே வந்து ஓ பாண்டியமகாராஜனே எங்களுடைய குதிரையேற்றத்தைக்கொஞ்சம் பார்ப்பீராக வென்றுசொல்லி

அந்தப்பாண்டியனும் அந்தப்பாண்டியன் சபையாருமேயல்லது தேவர்களு மயங்கும்படி எல்லா உலகங்களையும் அசைக்கவல்ல கடவுள் ஐந்து கதியும் பதினெட்டுச் சாரியுமுதலான விசித்திர வேறுபாடுகள் தோன்றத் தாமசையாமல் குதிரையைச்சற்றே அசைத்தருளினார் அப்படியே மற்றைக் கணுதிபர்களும் தனித்தனியே தங்கள் குதிரைகளை நடத்திக்காட்டக் கண்டுபாண்டியன் அவர்களைப்பார்த்து உங்களிலே தலைமைத்தனங்கொண்டவர்யாவரென்றுகேட்டான் அதற்குகுதிரைவீரர்கள் எங்களுக்குத் தலைவரான தனிவீரர் இவர்தானென்று கடவுளாகிய வீரரைக்காட்டினார்கள் அவர்கள்காட்டினவுடனே சுட்டுதற்கரிய சோதியாகியகடவுள் வேதமாகிய தாவுகின்ற புரவியோடு பாண்டியன்முன்னேவர அவரது கிருபாதிருஷ்டிபாண்டியன்மேலேபட்டுத்தன்னை மறந்தெழுந்து இரண்டுகைகளையுந் தலைமேலே குவித்துக்கொண்டு நின்றான் உடனே கடவுளருளாலேமயங்கினபாண்டியன் மனந்தேறி இன்று ஒருகுதிரைவீரனைக்கண்டு நாம்எழுந்து தலைமேலே கைகள் குவித்துக்கொண்டு நின்றதற்குக் காரணமென்னவென்று சிங்காசனத்திலே மறுபடியும் இருக்கநாணி அப்படியே நின்றான்.

அப்படிநிற்கின்றபாண்டியன் முகத்தைப்பார்த்து எதிரேநின்றவேதப்பரிமேலழகர் ஓ பாண்டியமகாராஜனே உன்னுடைய பொருள்களெல்லாங் கொண்டுவந்து உன்சொல்வழுவாத மந்திரியானவர் எனக்கும் என்னைச்சேர்ந்தவர்களுக்கும் நிரம்பக்கொடுத்ததினாலே இந்தக்குதிரைகள் தேவர்களுக்கேயல்லாமல் மனிதர்களுக்குக் கிடைக்கத்தக்கதல்ல குதிரை லக்ஷணந்தெரிந்தவர்களாலும் விலையளவு சொல்லக்கூடாதவைகளாய்சாஸ்திரத்திலேசொல்லியலட்சணங்களமைந்துள்ளனவாய் நல்லகுதிரைகளுமக்குவந்து சேர்ந்தன ஆனாலும் குதிரைவிற்கும் வர்த்தகத்தைச்சொல்லக்கேளும் இந்தக்குதிரைகளை என்னிடத்திலே இன்றுநீர் கயிறுமாறி உம்முடையதாகக்கொள்ளுகிறதினாலே இந்தக்குதிரைகள் நாளைக்கெப்படியானாலும் எனக்கும்உமக்கும் யாதொருவழக்கும் பேசக்கூடாது இதுவேகுதிரைவிற்கு நியாயமென்றுசொல்ல அதுகேட்டபாண்டியன்மனமகிழ்ந்து அதற்குச்சம்மதித்து அந்தத்தனிவீரரைப்பார்த்து என்னிடத்துள்ள மந்திரிகளிலேசிறந்த வாதவூரர் உங்களுடைய சிநேகிதனாலேபின்னும்எனக்குச்சிறந்தவரானாரென்று கொண்டாடிப் பாண்டியன்சொன்னான். அதற்குப் பாம்பாபரணந் தோற்றாமல் வேதக்குதிரைமேல்வந்தவர் மரகதநிறமான வேப்பமாலையணிந்தபாண்டியனைப்பார்த்து குதிரை கயிறுமாறிக் கொடுக்குமுன்னே பொதுவானகுதிரைலட்சணங்கள் சொல்லத்தொடங்கி கேளும்பாண்டியமகாராஜனே இந்தக்குதிரை சமயம் வந்தால் மதிலும்கடந்துபோகுங் கண்ணுனுழைபாத பலகணிவாயிலுநுழையும்கண்டவெளியெல்லாம் தனக்குவழியாகப்போகும்பசிவந்தால் எதுகிடைத்தாலுந்தின்னும இன்னும்ஒப்பில்லாதசிறந்தஇலக்கணங்களுள்ள இந்தக்குதிரைகளிலொன்று உன்னிடத்திலிருந்தாலும்லட்சுமிகடாட்சமும் குறையாதசெல்வமும் மேன்மேலானகீர்த்தியும்பெறுவாய்நெருப்புத்துமாந்தளிர்நிறமான நாக்கும் கீழேஊன்றுகின்ற உயர்ந்தகுளம்புகளும் நீண்டு சரியொத்திருக்கிற பற்களும்பாம்புப் படம்போலவிரிந்த கழுத்து மார்புங்கொண்டிருந்தால் அதற்குப்பாடவமென்று சொல்லவேண்டும் விசாலமானநெற்றியும் நீண்டதலை

மயிர்போலேஒருநிறமானபுறமயிருடனே நின்றுகோணமாய்அழகியமுகமுள்ளதைக் கேட்கமென்று சொல்லத்தகும்எதிர்த்தயுத்தத்திலேமுகத்திலேகத்திகொண்டுவெட்டினாலும் எதிர்த்துச்சண்டைசெய்யவல்லதாய் குரங்கு-வேங்கை-யானை-நரி-சரபம்-முயல்கள்போலுங் கதியுடையதானால்அதை இவுளியென்று சொல்லப்படும் உன்னதமு நீளமுமுடையதாய்சங்குகற்கண்டுபோல் வெள்ளையானவாய் நுரையையுமிழ்வதாய் பின்னமான ஒருநிறமும் மைநிறமுமுடையதை வன்னியென்று சொல்லவேண்டும் பலமான கழுத்திலே சிறந்ததெய்வீகமான மணியும் அஷ்டமங்கலமும் அழகானபஞ்சகல்யாணமுமுள்ளதைக் குதிரையென்று சொல்லவேண்டும் குங்குமவாசனை கருப்பூரவாசனை அகிற்சந்தனவாசனை இவைகளை வீசுவதாய் சங்கு - மேகம்-சரபம்-சிங்கம்-இவைகள்போலனுமானிப்பதைப் பரியென்னப்படும் நாலுகால்களுங் கடைந்தெடுத்து நாட்டினாற்போல்வதாய் கொள்ளி வட்டம்போலே வட்டமிட்டுச் சுழல்வதாய் மேலேறினவீரன் காலுக்குள்ளடங்குவதைக் கந்துகமென்னத்தகும் கோட்டையும் மலைமேற்கோட்டையும் ஆறும்தாண்டும்பலமுள்ளதாய் இந்த முழுலட்சணங்களெல்லாம் முழுதுங்கொண்டதைப் புரவியென்று சொல்லவேண்டும் ஆனால் இந்தயெட்டுவகையும் எட்டுவயதுள்ளவைகளே பகைவரைவெல்லுவதான வல்லமைபொருந்திய இந்த எட்டுபகையும் பாண்டியராஜனே நீயேஏறத்தக்கவைகளென்றுசொல்லி வேதத்தின் முதுகிலேறியிருக்கின்ற தனிவீரர் திரும்பித் தமதுகூட்டத்தார் முகத்தைப்பார்த்தார். அவர் பார்த்தவுடனேநெருங்கிக் கூடநின்றவீரர்களெல்லாம் குதிரைநூல் வல்லவர்களறிவும் பின்னிடும்படி தனித்தனி சாரிவிட்டார்கள்.

அதுகண்டுபாண்டியன் அதிசயித்துத் தன்பக்கத்திலேதனக்கு முழுதும் நம்புதலானமந்திரிகள் எல்லாரையும்பார்த்து அசையாத தலையையசைத்து மெள்ளமெள்ளத் தோன்றுகின்ற நகையோடு மிகவுஞ்சந்தோஷித்தான் அப்போது கடவுளும் தமதுதெய்வத்தன்மைபொருந்திய குதிரையைச் செலுத்தி இடசாரிவலசாரிகொண்டு வட்டமாக வரும்போது கொள்ளிபோல வீதியெல்லாம் ஒரேகுதிரையாகத் தோன்றி வீதிகளெல்லாங் குதிரைகள் விற்பனவாக ஒருநிமிஷத்துக்குள்ளே முன்னே ஒருபாண்டியனுக்காக தமது கையிற் கங்கணமான பாம்புவளைந்து சுற்றினதுபோலே சுழல இன்னும் பல நிறங்கள்கொண்ட குதிரைகளும் வீதிகளெல்லாம்பின்னினாற்போலப்பின்னி வட்டமாக மதுரையென்கிற ஒரு பெண்ணானவள் கையில்தரித்த நவமணிக் கடகம்போலவும் விளங்கின இன்னும் அந்த மதுரையிலுள்ள பெண்களடித்துக்கொள்ளும் பொன்னிறமான கந்தபொடிகள் சிந்திக்கிடக்கிற வீதியிலே நடக்கிற குதிரைகூட்டங்களாலே கிளம்பினதூளிகள் பொன்னுலகத்திலே குதிரைகள்செல்ல அங்குண்டான பொன்னிறப்பொடியை யொப்பாயின.

இப்படித்தேவர்களு மனிதர்களும் அந்தமதுரையிலுள்ளயாவரும் அதிசயிக்கும்படிகுதிரைநடத்தி அந்தமதுரைக்கரசனை பாண்டியனுக்கு முன்னே கருணைக்கடலானகடவுள்வந்துநின்று அக்குதிரைகள் பிறந்தவிடங்களை வகுத்து இந்தப்பரிகள் காம்போசம், இந்தப்புரவிகள் காந்தாரம், இந்தக் குரங்குகளை வான்மீகம், இந்தக் கந்துகம் சிந்து, இந்தக்கனவட்டம் பா

ஞ்சாலம், இந்தக்குதிரை துளுவம், இந்தத்துரகம், இமயம், இந்தக்கற்கிகலிங்கம், இந்தப்பாடலம் ஆரியம், இந்த அச்சுவம், கூர்ச்சரம், இந்தத்துரங்கம் கேகயம், இந்தக்கொய்யுளை யவனம், இந்தக்கொக்குமக்களம், இந்த இவுளி வனயுசம், இந்தப்பாய்மாபல்லவம், இந்தக்கோரம் சவ்வீரம், இந்தக்கன்னி மராடம், இந்தவன்னி வாசந்திகம், இந்தக்கோடகம் காடகம், இந்த அயம் கான்மீரம், இந்தக்கோணம்மாளவம், இந்தக்குந்தம் கந்தரம், இந்த அரிசவுராட்டகம், இந்தக்கிள்ளைசாலிவேப், இந்தத்துரகதம்வேறொரு தீவாந்தரம் இந்தக் குரகதம்குருக்கேந்திரம் என்று இப்படிப்பலபலதேசங்களிலுண்டாகிய பெயர் வேறுபாடான குதிரைகளையெல்லாம் இந்த வாதவூரர்கொடுத்த பொருளுக்காசைகொண்டு இவர்களைகொண்டுவந்தவர்கள் கேளும்பாண்டியராசனே இந்தக்குதிரைகளில் வெள்ளி-முத்து-பால்-சந்திரன்-சங்கு-வெண்பணி இந்தநிறமுள்ளது. வெள்ளைக்குதிரை-மாதுளம்பு-செம்பஞ்சுக்குழம்பு இந்தநிறமுள்ளது. சிவப்புக்குதிரை-குயில்-வண்டு-மேகம்-இந்நிற முள்ளது கறுப்புக்குதிரை-கோரோசனை நிற முள்ளது-பொன்னிறக்குதிரை இந்தநான்குநிறமுங் கலந்திருப்பது மிச்சிரம்-முகம்-மார்பு-உச்சி-வால்-கால்கள்நான்குஆக எட்டுறுப்பும் வெண்மைகொண்டது அஷ்டமங்கலம்தலை-வால்-மார்பு இந்த மூன்று நீங்கலாக ஐந்திடத்தும்வெள்ளையுள்ளது. பஞ்சகல்யாணிகழுத்தில் வலஞ்சுழித்திருந்தால் அதையேதெய்வமணி யென்றுதெரிந்தோர்கள் சொல்லுவார்கள்முகம்-தலை-நாசி-மார்பு இந்தநான்கிடத்திலும் இரண்டிரண்டுசுழிகளும் நெற்றிநடு பின்பக்கம் இரண்டிடத்திலுமொவ்வொருசுழியும் உள்ள குதிரையே லட்சணமுள்ளது. இந்தச்சுழிகளில்லாதிருந்தால் அதை இலக்கணப்பழுதென்று சொல்லவேண்டும் வெவ்வேறாக மார்பிலே ஐந்துசுழியுண்டானல் அதற்குப்பேர் ஸ்ரீவற்சம் நெற்றியில் இரண்டுசுழியாவது மூன்றுசுழியாவதிருந்தாலும் நல்லதே அப்படியில்லாவிட்டால் நெருக்கமாகநான்குசுழிவலம்புரியிருந்தால்நல்லது அப்படியன்றி இரண்டுசுழி முன்னங்கால்களிலும் மூலத்திலு மிருந்தாலும்நல்லதென்றே சொல்லுவார்கள் கண்டத்தினடுவே இரட்டைச்சுழியுடையகுதிரையானது தன்னுடைய தலைவனுக்குமிகவும் தரித்திரத்தையுண்டாக்கும் அல்லது தன்னைக்கொண்டவனுக்கு மிகுந்ததுன்பத்தையும் மரணத்தையும் உண்டாக்கும் அந்த இரட்டைச்சுழி கணைக்காலிலிருந்தால் அந்தக்குதிரையையுடையவனுக்குப் பயம்-துன்பம்-விலங்கு இவைகளுண்டாக்கும் மேலுதடு-முன்காலடி-கபோலம்-முழங்கால் இந்தநான்கிடங்களிலுஞ் சுழிகளிருந்தாலும் அந்தக்குதிரை தன்னைவாங்கிக்கொண்டதலைவனைக்கொல்லும் இந்தச்சுழியையுடையகுதிரையை ஏறாமல்லாயத்திலே கட்டியிருந்தாலும்குற்றமாம். இவைகளிருக்க குதிரைக்குப்பிராயம் முப்பத்திரண்டு அவஸ்தைபத்து அவஸ்தை ஒன்றுக்குவருஷம்மூன்றுமாதம் இரண்டுநாள்பன்னிரண்டு இன்னமும் எந்தநிற்பேதங்கள் மிகுந்திருந்தாலும் வெள்ளை நிறங்கலந்திருந்தால் அவ்விதமான குதிரைநல்லதே கறுத்தகுதிரைக்கு வயிறாயினும் மார்பாயினும் சிவந்த நிறமாயிருந்தால் அதுமிகுந்தஜெயத்தைத்தரும் அந்தவயிறும்மார்பும்வெள்ளையாயிருந்தால் அதற்குப்பெயர்வாருணம் அது பகைவர்பேரிலே வெற்றிக்கொடுக்கும்பிடர் வெளுத்திருந்தால் உ

டையவனுக்குப்புத்திரப்பேறுண்டாம் மார்புவெளுத்திருந்தால் சந்தோஷத்தைக்கொடுக்கும் மணிக்காலும் கண்டத்தினிடமும் வெளுத்திருந்தால்பொருள்கொடுக்கும் முகம்வெளுத்திருந்தால் வெற்றி கொடுக்கும் பின்பக்கத்தினிடம் வெளுத்திருந்தால் சுகங்கொடுக்கும் இடைவெளுத்திருந்தால் சந்தானம் பெருகும் வலப்புறத்திலேவெண்மையாயிருந்தால் தனதானியங்கள்பெருகும் முதுகு-வால்-முகம்-இந்தமூன்றும் வெளுத்த குதிரைஜெயங்கொடுக்கும் உந்திதொடங்கிமுன்புறமெல்லாம் சூரியன்போலேசிவந்து சந்திரன்போலே பின்புறமெல்லாம்வெளுத்து அழகுள்ள குதிரைக்குப்பகலில் ஜெயமுண்டாகும் சந்திரன்போலேமுன்புறம்வெளுத்துப்பின்புறமெல்லாம்சூரியன்போலேசிவந்தகுதிரைக்கு இராத்திரியிலே ஜெயமுண்டாகும் இந்த இருவகைக் குதிரைகளும்வந்திருக்கின்றன குதிரைகாலூன்றினால் பந்துவைத்தாற்போலவும், நின்றால் மலைபோலவும், அனுமானித்தால் யானைபோலவும், சிங்கம்போலவும், வேகத்தில் வாயுப்போலவும், ஆட்டத்தால் நட்டுவன்போலவும் நடந்தால் யானைபோலவும்சிங்கம்போலவும், குலமகளைப்போலேகவிழ்ந்தமுகமும் கருநெய்தல்போலே கண்ணுமேகம்போல சிறந்துவிளங்குகின்ற நிறமும் கருநெய்தற்பூப்போலே வாசனையும் மலராலும் அகிற்சந்தனங்களாலும்ரத்திநாபரணங்களாலும் அலங்கரித்தால் நீங்காத அதிகசந்தோஷங்கொண்டுவிலங்குவது வுத்தமமானகுதிரையென்று சொல்லுவார்கள் உத்தமக்குதிரைக்குயர்வு ௱-விரலளவுமத்திமக்குதிரைக்குயர்வு அ௯-விரலளவு அதமைக்குதிரைக்குயர்வு சுக-விரலளவு-என்றுநிலைபெற்ற நாகபந்தம் விருத்தம்நெடுவீதிஎன்கிற குதிரையின்நடைபேதமெல்லாம் இனிது நடத்திக்காட்டினவெவ்வியகுதிரைகளுக்கு எஜமானைப்பார்த்ததிசயப்பட்டு பாண்டியன் சிரக்கம்பஞ்செய்துவிலையில்லாதவஸ்திரமொன்றுகொடுத்தான் கடவுள் சவுக்கின்மேல் ஏற்று புன்னகைசெய்தார். அப்படி ஏற்றுக்கொண்ட அரியவஸ்திரத்தை நேசத்தையுடையவனுப் காற்றைபோலச் சீக்கிரத்தில்வந்து விரைவாகத்தன்கையில் வாங்கி வணங்கவில்லை சிரசிலேதரித்துக் கொள்ளவில்லையென்று பாண்டியராஜன் திருநீற்றைத்தரித்த கடவுளினுடைய மறைப்பினாலே கோபங்கொண்டான் வெளிப்படக்காணுதற்கரிய அருமைத்திருமேனியையுடைய பரமசிவனைவர் பார்த்தவர்கண்களும் மனமும்சந்தோஷமடையும்படி வருகிறதைப்பார்த்தும் பாண்டியராஜன் காணவில்லை ஒளித்துக்கொண்டு உலகெங்கெணு நிற்கின்றகடவுள் மிகுந்த [illegible]றவியையொழித்து அறிவுகொடுத்தாலல்லாமல் எவர்கள் அவருடையதன்மையைத்தெரியவல்லவர்கள் எட்டுத்திக்குகளிலும் இருக்கின்ற அரசர்கள் அன்பால்தமக்குக்கொடுக்கப்பட்ட வஸ்திரங்களையெல்லாம் சவுக்கிலேவாங்கிக்கொள்வது அவரதுதேசவழக்கமென்று வளத்தையுடைய தமிழ்வேதத்தைப்பாடுகின்ற திருவாதவூரரானவர் பாண்டியராஜன் முன்னேநின்று அவன்மனதிலேகொண்டிருந்தகோபம் சாந்தியாகும்படிதாழ்ந்துசொல்லியருளினார். நன்மைபொருந்திய இந்தவழக்கத்தைக்கேட்ட பிற்பாடு அன்புகொண்டு கலக்கமில்லாத அஸ்வலட்சணசாஸ்திரங் கற்றறிந்த புலவர்களைப்பார்த்து லக்ஷணவிதிப்பிரகாரமிருக்கிறபெரியகுதிரையினுடைய இழிவும் உயர்வும் பிரகாசமாக உங்களுக்குள்ளேசோதித்து நம்மோடேசொ

ல்லுமென்று சொன்னான் பாண்டியராஜன் சொல்லினாற் பிரகாசிக்கப்பட்ட
அஸ்வலட்சணத்தினுடைய உண்மையாகியபொருளைத் தெரிந்தவர்கள் வெ
ற்றிபொருந்திய விரும்பத்தக்க குதிரைகளுக்குள்ளே குற்றத்தையும் குண
த்தையும் பார்த்து மகமேருமலையின்மேல் தன்னுடைய மீனக்கொடியை எ
ழுதிவைததுத்திரும்பிய வெற்றியைக்கொண்ட அரசர்க்கரசனாகிய பாண்டிய
ராஜன்முன்பாக இந்தவிதமாகச்சொன்னார்கள். துன்பத்தைத்தருகின்ற சந்
திரச்சுழி அண்டாவர்த்தமென்னுந் தண்டை யடியிலிருக்கின்ற சுழிகளும்
உடலிலொருபக்கத்தி லிருக்கின்ற சுழியாகிய கௌவகமும், காகாவர்த்தமு
ம், மேன்மையாகவிளங்கிய முன்வளையச்சுழியும்பரவிய செழுமையுள்ள கே
தாரிச்சுழியும், காலிலிருக்கின்ற பிரயோசனமில்லா கொடிய சுழியாகிய கே
சாவர்த்தமும், பொலிவோடுங்கூடிய கச்சைநிலையிற் பட்டையாகச் சொல்லப்
பட்டசுழியும் ஆகிய இந்தச்சுழிகள் பொருந்தாவனவாம் கொம்பைபபோலி
ருக்கும் நீண்டகாதும் முறுக்கியகாதும் மூன்றுகால்விளர்த்து ஒருகால் கறு
த்தும் கறுத்தகாலொன்றும், மூன்றுகால்கறுத்து ஒருகால்விளர்த்தும், விள
ர்த்தகாலொன்றும், விளர்த்தகண்ணும் தீனிகுன்றுமையும்வெம்புகின்றதீயை
யுடைய மயானருத்திரனைப்போலும் நீலகண்டம் பீஜமில்லாமையும் ஏறக்கு
றையவிருக்கும் பெரியபீஜமும் செவ்வையாகிய பதுமையும் அக்கினியும் சித்
திரம்போ லசைவில்லாமலும் முகமும் வால் நாற்கால்களிவைகளிற் சுழியில்
லாமையுமென இப்பூலோகத்தார் சொல்லிய குற்றங்களி லொன்றுமில்லா
மல் கழுத்தடியில் மார்க்கண்ட மிரட்டையாயிராமல் சிரசிலே இரண்டு சுழி
யும் செழுமையுள்ள நாவிலே நான்குசுழியும் சிறந்தமார்பிலே இரண்டு சுழி
யும் நெற்றியிலே ஒருசுழியும் உதட்டிலே ஒருசுழியும் ஆகிய சுழிகள்பத்தும்
குறையாமல் நரி-பூனை-கரியகாக்கை-பேய்-ஓரி - நாய்செழுமையுள்ளபன்றி இ
வைகளுடைய சத்தமில்லாதவையாய்ப் பெரிய அலையையுடைய கடல்மேகம்
சங்கம் இடபபேரிகை இவைகளைப்போல் ஓசையுமுடையதாய் கோபித்துப்
பகைக்கின்ற-புலி-கரடி-கழுதை-செந்நாய் ஒளியையுடைய பூனை-நரி - தரிக்க
ப்பெற்ற கரியகாயம்-தீ-புகை இவைகளினுடைய நிறத்தைப் பொருந்தாத
வைகளாய், இறுமாப்புடையனவாய், வாயுவென்னும் வேகத்தோடுங் கூடிய
பிரகாசித்த கிரணங்களுடைய வெள்ளிய முத்துக்கள் சந்திரன் நீலரத்தினம்
மெல்லிய தாமரையினுடைய மகரந்தம் செழுமைபொருந்திய பொன்காயா
செவ்வரத்தமலர் நல்லபச்சக்கிளிஆகிய இசைகள்போல பொருந்திய உருவ
த்தை யுடையனவாகி நெற்றி பரந்து உயர்ந்த மேலுதட்டையுடையவாய்வெ
ண்ணிறநிறைந்துதம்மிலே வரிசையாய் ஒத்துப்பிரகாசிக்கப்பெற்ற பற்களை
யுடையவாய், நிறைந்த நல்லவாசனைபொருந்தி நாக்கும்மாவினிலந்தளிர்போ
லும்செம்மைநிறம்பொருந்தி இரண்டிமையின்மயிருந் திரட்சியுடையவாய்
உக்கிரமாகிய கண்பார்வையுடையவாய், தேகத்தினிடத்தில்அதிகமாமிசமில்
லாமல் உள்ளேவளைந்து முக்கோணமாய்ப் பிரகாசிக்கின்ற முகத்தையுடைய
வாய்க்கழுத்துமயிரும் தலைமயிரும் ஒருநிறமாயிருப்பதாய்மார்பினுடனே கண்
டமும்பாம்பின்படமும்போலொத்துச் சங்குகள்போலத் தொனியுண்டாக்கு
வித்துஉள்வாங்கி மண்டலஞ் செய்வனவாய் வலிமைகொண்ட குளம்புடைய
வாய்கிளைத்திருக்கின்ற நரம்புகள் மறைந்து தசையையுடையவாய்ப் பிரகாசி
க்கின்ற முழங்கால் நெளித்தளில்லாமல் நெளிப்பாகிய முதுகும் பருத்த து
டைகளுந்திரண்டு தண்டைக்காலானது நீண்டு சிவந்த நிறத்தையுடையவாய்

மிருந்த செழுமையுள்ள சாமவேதத்தினுடைய நாவிலும், பிரமதேவனுனவன் ஓமஞ்செய்யும்போது அவன்கண்ணினின்று கையில்வழிந்த நீரினிடத்தும் இந்திரன்முதலிய திக்குப்பாலகரெண்மரிடத்தும், சமுத்திரத்திற் பிறந்த அமிர்தத்தினிடத்தும் அந்தப்பிரமனேமஞ்செய்த அக்கினியிடத்தும், நிறைந்தகருப்பையிலும் லட்சுமிசாபத்தாற் பிரமன் கோட்டானுக அந்தக்கோட்டான் முட்டையிலும், ஆகிய இவ்வேழிடத்திலும் உற்பத்தியான பழமையுடையனவாய் நாலுகாலும்நெற்றியும்ஒக்க வெளுத்திருக்கும் பஞ்சகல்யாணியென்னுங் குதிரைகள் ஆகாசத்திலும நீரிலும் செல்லுகின்ற வழியுண்டாய் மங்காளனென்றும், சாரங்கனென்றும், கங்காநீலனென்றும், மௌவழகனென்றும், கொங்காளனென்றும், சன்னசம்பாளென்றும், குங்குமச்சோரனென்றும் கரியானென்றும், நீலனென்றும், சாரனென்றும், பொல்லானென்றும், கருங்காற்சம்பானென்றும் பலநிறத்தையுமுடையசாதியாய், உயர்ந்த குதிரைகளிவைகளென்று சொல்லினர்.

அவர்கள் இவ்விதமாகச் சொன்னபின்பு பரிமேலழகராகிய சோமசுந்தரக்கடவுள் ஒரு நரிப்பரியைகாட்டி இதைப் பூசித்துவணங்கிக் கயிறுமாறிக் கொள்ளென்ன உடனே அரிமருத்தனபாண்டியன் அவர்காட்டின குதிரைக்கு முத்துமாலை சதங்கைச் சிலம்புகளால் அலங்காரஞ்செய்து நல்லபூமாலையும் சந்தனமுமணிந்து தூபதீபங்கொடுத்துப் பத்தியுடனே வணங்கி யெதிரேநிற்க அப்போது முத்தொழிலின்மூவராய் மூவர்க்குந்தெரியாத முக்கண்மூர்த்தியான பரிமேலழகர் திருவாலவாய்ப்பரனைப்பார்த்துத் தமதுகைகளைத்தலைமேலே குவித்து வாழிவாழியென்று குதிரையைக்கொடுத்துக் கயிறுமாறி உபநிடதமாகிய சீனியையுடைய குதிரையொன்றுதவிர மற்றைக்குதிரைகளை கொடுக்கப் பாண்டியன்வாங்கி குதிரைவீரர்களிடம்தர அவர்கள் லாயத்தில் கட்டினுர்கள் பின்பு குதிரைவர்த்தகரான கடவுளுக்குப் பாண்டியன் வெள்ளைவஸ்திரம் வெகுமானமாகக் கொடுத்தான் பாணனுக்கு ஏவல் செய்தவராகிய சோமசுந்தரக்கடவுள் காணமல் குதிரையை விட்டிறங்கி வாங்கி அந்த வஸ்திரத்தை மற்ெறாரு கங்கைபோலத் தமது முடிமேலே சூடிக்கொண்டார், அப்போது கணுதிபர்கள் நமதுகடவுள் குதிரைவிட்டிறங்கி இந்தப்பாண்டியராசனிடத்திலே யிரந்து தலைமேலே சூடிக்கொள்ளுகிறதற்குக் காரணமென்ன இனி இந்தப்பாண்டியன் கடவுளணிந்தகபாலமும், திகம்பரமும் பாம்பாபரணமுங் கொள்ளுவானேவென்று தங்களுக்குள்ளே ஒருவருக்கொருவர் பேசிவெகுண்டார்கள். பின்பு மனுநீதிப்படி அரசு நடத்துகிற பாண்டியன் குதிரைவீரர்களெல்லாருக்கும் வெவ்வேறே வஸ்திரங்களைகொடுக்க அவர்களும்வாங்கிச் சூடிக்கொண்டார்கள். பின்பு அருள்வடிவாய்ச்சிறந்துவந்த பரிமேலழகரும் மற்ற மாயக்குதிரைவீரர்களும் மறைந்து போயினுர்கள் அப்படி அவர்கள் போனபின்பு தனக்கு இம்மைக்கு மறுமைக்குந் துணையாகிய வாதவூரடிகளுக்கு அரிதானசிறப்புகள் செய்து அவரிடத்துக்கு அவரை அனுபபிவிட்டுப பாண்டியன் உச்சிக்காலத்தில் தனதரண்மனைக்குள்ளேபோக மற்றைமந்திரிகளும் தங்கள் தங்கள் வீட்டிற்போககுதிரைகள் பார்க்கவந்த மதுரைப்பட்டணத்து ஜனங்களும் தங்கள் தங்கள் வீடுகளுக்குப்போக பரிமே லழகரும் தம்முடைய திருக்கோயிலுக்குப்போய்த் தம்முடைய திருவிளையாட்டெல்லாம் மீனுட்சியம்மையாருக்குச் சொல்லிக் கொண்டிருந்தார்.

நரிபரியாக்கியபடலம்-முற்றிற்று.

† இந்த அடையாளமுதல் ‡ இந்த அடையாளம்வரையில் திருவாதவூரடிகள் புராணத்திலிருந்து சேர்க்கப்பட்டது.

சிவமயம்.

## அறுபதாவது

# பரிநரியாக்கிய படலம்.



கலிநிலைத்துறை.

ஞானநாயகனாணையானரிபரிவெள்ள
மானவாறுரைசெய்துமீண்டப்பரிநரிபாய்ப்
போனவாறுகண்டமைச்சரைப்புரவலன்கறுப்ப
வானவாறுபோல்வைகைநீர்வந்தவாறுரைப்பாம்.

இதன்பொருள்.

ஞானத்தலைவராகிய சோமசுந்தரக்கடவுளது திருவாணையால் நரிகளெல்லாங் குதிரைக்கூட்டங்களாகச் சமைந்த திருவிளையாடலைச் சொன்னோம் இனி, மீண்டும் அந்தக்குதிரைகள் நரிகூட்டங்களாகி ஓடிப்போய்விட்ட அதிசயத்தையறிந்து அதனைமோசமாகவெண்ணி மந்திரித்தலைவரைப் பாண்டியன்கோபித்து வருத்திய சமையத்தில் அச்சோமசுந்தரக்கடவுளது திருவாணையால் வையைநதியானது ஆகாசகெங்கையைப்போல மதுரையிற்பெருகிய அற்புதத்தையும் சொல்லுகின்றோம்.

நெருங்கிய பலவாத்தியங்களின் முழக்கமும் சேனைகளும் அதிகமாகப் பெண்கள்கூட்டங்கள் எதிரேவந்து மங்கலங்கள் ஏந்தப் பாண்டியன்கொடுத்த வரிசைகளைப்பெற்றுக்கொண்டு வாதவூரடிகள் தமது திருமனையிலே வந்துபுகுக அப்படிவந்து புகுந்தவுடனே சுற்றத்தாரும் கல்வி கற்றவர்களும், மிகுந்தசிநேகிதர்களும், தங்கள்தங்கள் முறைப்படியே விசாரிக்கின்றவர்களுக்கெல்லாம் தமது திருவாக்காலே உபசார வார்த்தைகளும் சந்தோஷமுமுண்டாகச் செய்தனுப்பிவிட்டு வாதவூரடிகள் தாம்தனியே ஓரிடத்திலே யிருந்து கரந்தைமலர் மாலையைத்தரித்தருளிய ஆலவாய்க்கண்ணுதலாகியசோமசுந்தரக்கடவுள் நாம் வேண்டிக்கொண்டபடியே கொண்டுபோன பொருள்களெல்லாம் அடியார்களும் தாமுமாகவே ஒப்புக்கொண்டு நம்மையும்பணிகொண்டு நமதுதுன்பத்தை தீர்த்தார். அல்லாமலும் பாண்டியனுக்குச்சம்மதியாகவே குதிரைகளுஞ்செலுத்தினார் ஆதலால் இனிநமக்கு முழுதுங் கவலையில்லாமல் செய்த அவரேபிரபஞ்சமாயையைமுழுதும் வெல்லதமதுபேருள் விளைக்குவதான பேரானந்தத்தைநாமடையும்படி நம்மை தவக்கோலஞ்செய்தருளவேண்டுமென்று அன்புமிகுந்து இகபரத்தாசைகளொன்று மில்லாமல் அறிவினுக்குள்ளுணர்வாகத்தோன்றுகின்ற பூரணமாகிய சோமசுந்தரச்சோதியினுடைய வெள்ளியம்பலத்துள்ளாடிய திருவருளை மனத்துள்ளே தியானித்துக்கொண்டிருந்தனர். பின்புசூரியன் நாளைத்தினமும் திருவாலவாய்க்கடவுள் தமதன்பரை ஆண்டுகொண்டருளவேண்டி மண்சுமந்தருளுவாரெ

ன்று அதையும் பார்ப்பதற்காக ஊளையிடுகிறநரிக்குதிரைகளினுடைய தூளி களாலேமூடுபட்ட உடம்பைக்கழுவிக்கொண்டு திருப்பவேண்டுகிறவன்போ லக் கடலிலேகுளித்து மறைந்தான்.

அப்படி அவன்மறையவே சோமசுந்தரக்கடவுளின் திருவிளையாடலால் வந்த குதிரைக்கூட்டங்களாலேயெழுந்த செந்தூளியாலே அழுக்காய்மழுங் கின ஆகாயத்தை வெள்ளைநிலவாகிய வஸ்திரத்தினாலே அந்தத் தூளிகளைத் துடைக்கிறவன்போல் முத்துகளை எறிகின்றகடல்முகட்டிலே குளிர்ந்தசந்தி ரன் உதையமாகிப் பின்னும்நக்ஷத்திரங்களே எழுத்துக்களாகஎழுதினஆகா ரணமாகியவெள்ளைவஸ்திரத்தினாலே துடைக்கிறவன்போலவும் விளங்கினான் அப்படி இராத்திரியானபின்பு பாண்டியன் லாயத்திலே புகுந்திருந்தமாயக் குதிரைகளெல்லாம்திருவாலவாய்க்கடவுள் திருவிளையாடலாலே முன்னுள்ள தங்கள்வடிவுகொண்டு ஒன்றோடொன்றுபேசிக்கொள்ளுகின்றன எப்படியெ ன்றால் சங்கோசையும், பிணப்பறையோசையும்பெண்டுகள் அழுகுரலோசை யும்கொங்கைகள்சிவக்க இரண்டுகைகளாலு மாரடித்துக்கொள்ளுமோசையு மல்லவோநாம்எவ்விடங்களிலும் காதுகள் குளிர அமுதம்போலே கேட்போ ம் இப்போதுஅதைவிட்டு நாம்குதிரைகளாகி மனிதர்களைச்சுமந்து தாம்புச ங்கிலிகளாலே கட்டுண்டு பகலெல்லாம் சவுக்காலடிக்கத் துன்பப்பட்டுவருந் தினோம் இப்போதல்லவோநம்முடைய விதிவலியாலேநம்முடைய முன்னைய வடிவை நாம்கொண்டோம் ஆனால்முன்னேநாம்காடுகளிலே வாழுங்காலத்தி லே ஒருநாளாவது இந்தக்கவலைபான துன்பத்தைக் கண்டறிந்திலம் இனிநா ம்கட்டுண்டதழும்பும் சவுக்கடித்தழும்பும் உடம்பிலேபோகவில்லை ஆகையா ல்இனி விடியுமுன் ஓடிப்போய்விடுவதேநல்ல காரியம் இவ்விடத்திலே மனந் திருத்தியாக நாம்தின்பதற்கு ஊன்சரிந்து சிந்துகின்ற தொள்ளைநத்தைக ளில்லை நந்துகளுமில்லை செலவுக்குள்ளேபுகுந்துமறைகிற கவைக்கால் நண் டுகளுமில்லை இவர்கள் கொடுக்கிற கடலை-கொள்-பயறு-புல்லுகள் ஆகிய இ வைகளைத்தின்னத்தகுமோ இனி அரசன் ஏவலாளரும் பட்டணத்துஜனங் களும்நம்மைக்கண்டால் அடித்துக்கொல்லுவார்களே இனி அவர்களடியா மல் விடியுமுன்னே கட்டிகளை அவிழ்த்துக்கொண்டு காட்டிற்கோடிப் போய் விடுவதே நல்லவுபாயமான காரியமென்று தயிரியங்கொண்டு ஊளையிடுகிற குறுநரிக்கூட்டங்கள் ஒன்றாய்க்கூடிப்பேசிக்கொண்டு கொள்கடலைகளை வெ றுத்து நண்டு-நத்தை-சங்குகளைவிரும்பி சங்கிலிக்கட்டுகளை முறித்துக்கால்க ளிலே கட்டினகயிற்றுடனே முளைகளைப் பிடுங்கிக்கொண்டு ஓடிப்போம்வழி பார்த்து ஊளையிட்டெழுந்து குதிரைலாயத்திலே முன்னுள்ள குதிரைகள் மேலே பாய்ந்து பல்லுடைய அழுந்தக்கடித்து மென்று இரத்தத்தைக்குடி த்து குதிரைகள்முழுதும் பயந்தோடும்படி அவைகளின் பீசங்களைக் கடித் துக் காயம்பண்ணும்போது அந்தநரிகளின் ஊளைச்சத்தங்கேட்டு திடுக்கெ ன்றிநித்திரையைவிட்டெழுந்து இலாயங்காக்கின்ற காளைவீரர்கள்நேற்றுச் சிங்கங்களைப்போல்வந்த குதிரைகளெல்லாம் நரிகளாய் முன்னுள்ளகுதிரை களின் குடர்களைப்பிடுங்கித் தின்பனவற்றைக் கண்டார்கள்.

அப்படி அவர்கள்வந்து கண்டவுடனே சிலநரிகள் கெட்டியாய் வலிதான இரும்பு முள்ளுகள் நட்டிருக்கின்ற வேலியைத்தாண்டியோடின சிலநரிகள் சாளரங்களின்வழியைத் தொளைத்துக்கொண்டோடின சிலநரிகள்கோட்டையிற் கள்ளவழியாயோடின சிலநரிகள் கும்பலுக்குள்ளே நுழைந்தோடின காலொடிந்த நொண்டி நரிகளும் கிழநரிகளும் ஓரிகளும் குருட்டுநரிகளும் வியாதிகொண்டநரிகளும் ஓடிப்போக இடங்கள் கிடைபாமல் அந்தலாயத்திலேதானே கத்திக்கொண்டு கிடந்தன அவைகளிலே சில நரிகள் கிட்டவந்தவர்களையும் அதட்டினவர்களையும் கிழேவிழும்படி கடித்து நடுவே புகுந்தோடின சில நரிகள் தடுத்துப் பிடிக்கிறவர்கள் கால்களினடுவே நுழைந்தோடின சில நரிகள் அவ்விடத்தில்தானே கிடந்து ஊளையிட்டழுகின்றன சில நரிகள் குட்டி நரிகளைக் கூடக் கூட்டிக்கொண்டு வேலிகள் முறியத் தாண்டுகின்றன இப்படிப் பாண்டியன் அரண்மனையைக் கடந்து வெளியேபோன நரிகளெல்லாம் குளங்கள் தோட்டங்கள் வீரர்களின் வீடுகள் கோயில்கள் நாற்சந்திகள் வீதிகள பட்டணங்களெல்லாநெருங்கி மன்றுகளும் சித்திரகூடங்களும் மாடங்களும் செய் குன்றுகளும் தெற்றிகளும் வாயல்களும் நக்ஷத்திரங்களும் கிரகங்களுஞ் சுற்றுகின்ற உயர்வையுடைய சோலைகளும் எந்த இடங்களும் நிறைந்து நரிகள் தங்களினங்களுடனே ஊளையிட்டு அலைகின்றன அப்போது யானைச்சத்தமும் பலவித வாத்தியங்களினுடைய சத்தமும் தேர்கள் குதிரைகளின்சத்தமும் முத்தமிழ் முழங்குமோசையும் பாணர்கள்பாடுகின்ற பாடலோசையும் நிரம்பின பட்டணங்களெல்லாம் நரிகள் ஊளையிடவே எல்லாரும் விழித்தெழுந்தார்கள் வளர்க்கிற நாய்களெல்லாம் விழித்துநின்றன மயில்களும்பயந்து விழித்துக்கொண்டன கோழிகளும் விழித்தெழுந்தன வண்டுகளும் பயந்தெழுந்தன அன்னங்களுமெழுந்தன பட்சிகளும் யானைகளும் காகங்களும் விழித்தெழுந்தன.

இப்படியாக நரிகள் சமயல்வீடுகளிலே புகுந்து தங்களுக்கதிக பசியுண்டாகிப் பாண்டங்களையுருட்டிக்காய்ச்சின குழம்பு சமைத்தசோறு பலவிதமான உணவுமுதலியவைகளைக் குட்டிகளுக்குங் கொடுத்துத் தாங்களுந்தின்று ஊளையிட்டுத்திரிந்து புறுக்கள் மயிலுக்கள் கிளிகள் சிவந்த கொண்டைத் தலைச்சேவல் முதலியவைகளைப் பிடித்தும் தூங்குகின்ற பிள்ளையைக்கொண்டுபோய் அதன்வாயையும் பல்லையு நக்கிக் காயம்பண்ணுமல் தங்களுக்குறவுபோல விளையாடியும் வாசல்களிலே பந்தரிட்டுப்படர்ந்த கொடிகளைவேரோடு பிடுங்கியும் அதன்வாய்களைக் கடித்தும் கரும்புகளைச் சாறொழுக முறித்தும் வாயிலிட்டுக் குதட்டியும் வண்டுகள்வாயிலேமொய்க்க ஊளையிட்டுத் துள்ளிக்குதித்தும் திரிகின்றன பலவாகி முறுக்கமான கொம்புகளையுடைய ஆடுகளாயிரம் இரும்புபோற் கெட்டியான பன்றிகள் ஆயிரம் முருக்கமலர்களைப்போல் உச்சிக்கொண்டையையுடைய கோழிகளாயிரம் அதன்குஞ்சுகளாயிரமாக கொன்று பின்னேதொடர்ந்து நாய்கள் குலைக்கக் குலைக்கவோடி முன்னேகண்டவுயிர்களைக்கொன்று கோபங்கொண்டு வீரர்கள்போய் வலிந்துவந்தால் அவர்களைக்கீறி இரத்தங்களொழுகக்கடிப்பன அநேகங்களாக பன்றிகள் கத்துகிற சத்தமும் பல புள்ளிகளும் முள்ளுப்போன்ற வாய்களையுடைய கோழிக

ளின் சத்தமும் ஆடுகளின்சத்தமும் நாய்கள்குலைக்கிற சத்தமும் வீரர்கள்சத்தமுங்கூடி ஊளையிடுகிற நரிக்குரலுக்குச்சமானமாகிய தொருபக்கத்திலே அப்படியாகப் பொழுது விடிந்தவுடனே பட்டணங்களெல்லாங் கண்விழித்தெழ கோட்டை வாசல்களைக் காக்கிறவர்கள் வாயிற்கதவைத் திறக்குமளவில் தடையில்லாமல் எங்குங்கூடின நரிகளெல்லாம் கணப்பொழுதிலே இருள் சிதறியோடினாற்போல காட்டுக்கோடிப்போயின அப்போது அழிவில்லாத சிவபரஞ்சோதிபோல சூரியன் கிரணங்கள் வீசுமளவில் தெளிந்த சாத்துவித குணமுடையவர்கள் முன்னே தாமதகுண தேவதைகள் நில்லாமற்போவது போல நக்ஷத்திரங்களொளி மழுங்கிமறைய தேவர்களுக்குங்கிட்டாத வேதப்பொருளான கடவுள் அழுது தொழுகின்றவராகிய வாதவூரடிகளுக்காக எளியராய் மண்சுமந்தருளுகின்ற வருத்தத்தைக்கண்டு அவர்பாதங்களைவருகுவதற்காகவே ஆயிரங்கிரணங்களாகிய கைகளுடனே சூரியன் கீழ்த்திசையிலே உதையமாகவும் நேற்றைத்தினம் பாண்டியனுக்குக்குதிரைகள் செலுத்தித் தமதுகவலைதீர்ந்து சிவத்தைத்தியானித்திருக்கிற வாதவூரடிகள்மனம் பொற்றாமரைகள் மலர்ந்தன ஒப்பில்லாத பரம்பொருளைத்தெரிந்து பேச்சடங்கின மௌனிகள்போலக் குமுதங்கள் வாயொடுங்கின அப்போது இலாயக்காரர்கள் எப்படிப்போய்ச் சொல்லுவோமென்று பயந்து விரைந்தெழுந்து சென்று பாண்டியன் அரசாட்சிசெய்கின்ற சபையிலே அவனைக்கண்டு கும்பிட்டு உடல்நடுங்கி ஐயாநேற்றுக் காற்றினும் அதிகவேகமாய்க் கண்ணுக்கழகாய்வந்த குதிரைகளெல்லாம் முன்னிருந்த குதிரைகளுக்கு நமன்போலாகிக் கடித்துக்கொன்று பட்டணமெல்லாங் கும்புகூடிப் பலவுயிர்களையும் வதைத்துக் காட்டுக்கோடிப்போயினவென்று சொன்னார்கள். அப்படிச்சொன்ன மனதுக்குப்பொருந்தாத இந்தச்சொல்லாகிய கடுங்காற்றானது அவன் காதாகிய துருத்திவழியேபோய்க் கோபாக்கினியைமூட்டிவிடக்கண்களிலே நெருப்புப்பொறி சிந்தச்சிவந்து அரிமருத்தனபாண்டியன் கோபித்ததைக்கண்டு அங்குள்ள மந்திரிகளும் பயந்தொதுங்கினர்.

பின்புபாண்டியன் நேற்றுக்குதிரைகளைக்கண்டு அமுதமுண்டவன்போலச்சந்தோஷக்கடலிலே முழுகி இன்று அந்தக்குதிரைகளெல்லாம் நரிகளாயோடிப்போயின வென்றவுடனே துன்பக்கடலிலேமுழுகி அருகிலேயிருந்த மந்திரிகளைப்பார்த்துக் கண்டீர்களோ அந்தவாதவூரனாகிய கொடிய இருள்போலும் மனவஞ்சகன் நம்முடைய பொருள்களெல்லாங் கொண்டுபோய்க் காட்டிலேதிரிந்து மாமிசத்தையும் பிணத்தையும் குடலையும் பிடுங்கித்தின்ற நரிகளையெல்லாம் குதிரைகளாக்கிக்கொண்டுவந்துகாட்டிப்பின்பு இவன் பண்ணின மாயங்களுக்கு இவனை என்னசெய்வது என்றுகேட்க அதற்குமந்திரிகள் ஐயாஎங்களுக்கெல்லாம் கொடியபழிபாவங்களுண்டாகத் தவறுசெய்து உம்முடையசெய்நன்றியை மறந்தவனுக்கு நாங்கள்சொல்லக்கடவது என்னவிருக்கிறதென்று சும்மா தங்கள் தலையையும் அசையாமல் பேசாமலிருந்தார்கள்அந்தவேளையில்வாதவூரடிகள் இங்கேநடந்ததொன்றுந் தெரியாமல்பாண்டியனுக்கு குதிரைகள்செலுத்தவேண்டியகாரியத்தைநன்றாகமுடித்து மனக்கவலைதீர்ந்தோமென்றுகாளகண்டராகிய சோமசுந்தரக்கடவுளைத் தியானித்து அறிவுமயமாகியபேரின்பக்கடலில் முழுகினவராய் அரசன்சபைக்குவந்தார். அப்படிவந்தவாதவூரரை சிவந்தகண்களிலே நெருப்புப்பொறிசிந்தக் கடுகடுத்

துப்பார்த்துப் பாண்டியன் ஓய்வாதவூராநீயென்னுடைய பொருள்களெல்லாங்கொண்டுபோய் நலலகுதிரைகள் வாங்கிவந்தாய் உனக்கே அழகாயிருக்கின்றதல்லவா ராஜகாரியஞ்செய்து கீர்த்தியைநிலைநிறுத்தத்தக்கவர்களில்உன்னைப்போல்பாவர் இருக்கிறார்களென்று கோபித்துச்சீறும்போது வாதவூரார் ஐயா அந்தக்குதிரைகளுக்குக்குற்றமென்னவென்றுகேட்டார். அதற்குப்பாண்டியன் குற்றமேது அந்தக்குதிரைகள் இராத்திரி நரிகளாகி முன்னுள்ள குதிரைகளினுடைய வுயிரைவாங்கி இரததமொழுக நிணங்கள்சிதறக் குடர்களைப்பிடுங்கித்தின்று முன்னேவந்தவர்களையுங்கடித்துக் காயங்கள்பண்ணிக்காட்டுக்கு ஓடிப்போயின நீமுன்னே எனக்குக் கண்ணுங்கவசமும்போல் என்காரியங்கள்செய்துவந்தது சமயம்பார்த்து என்பொருள்களையெல்லாம் அபகரித்துக்கொள்ளுகிறதற்கோ உன்மந்திரித்தனம் நன்றாயிருக்கின்றது ஐயோ பிராமணர்குலத்தில்பிறந்து பரிசுத்தனென்று ஒருபேருங்கொண்டாயே நீ பண்ணினகாரியத்துக்கு வேறொருசாதியானால்அதிகமாகத்தண்டிக்கப்படுவார்களேயென்று சினங்கொண்டு தண்டிக்கிற சேவகர்களைக்கூவி நீங்கள் இவனைக்கொண்டுபோய் தடுத்துமறித்து வாதைசெய்து உபத்திரவத்தினாலே பயந்துகொடுக்க என்பொருள் முழுதும் வாங்குங்களென்றுசொல்ல அப்போது இயமனும் தண்டித்துப பொருள்வாங்கவல்லவீரர்கள் சூரியனை யிருள்மறைத்ததுபோலக்கவிந்து வாதவூரடிகளை பிடித்துக்கொண்டுபோய் அடிகொதிக்கின்ற கொடியவெய்யலில் நிறுத்தி சூரியனைப் பார்க்கச்சொல்லி இரண்டு கைகளிலும் நெற்றியிலும் கல்லேற்றி தங்கள் கண்களிலே நெருப்புப்பொறிசிந்தத்தண்டிக்க அதுபொறுக்கமாட்டாதவராய் சூரியனையும் சந்திரனையும் அக்கினியையும் கண்களாகக்கொண்ட சோமசுந்தரக்கடவுளை நினைத்தழுது.

நாதவோநாதமுடிவிறந்தநாடகஞ்செய்
பாதவோபாதகனுமென்னைப்பணிகொண்ட
வேதவோவேதமுடிவன்விளைந்ததனிப்
போதவோபோதநெறிகடந்தபூரணவோ.

ஐயவோவென்னுடையவன்பவோவன்பர்க்கு
மெய்யவோவெய்யில்வினையேன்றலைவைத்த
கையவோசெய்யகழற்காலவோகாலனைக்காய்
செய்யவோவேதப்பரியேறுஞ்சேவகவோ.

அத்தவோகல்லாக்கடையேனையாட்கொண்ட
பித்தவோபொய்புலகைமெய்யாகப்போதிக்கும்
சித்தவோசித்தந்தெளிவித்தெனைத்தந்த
முத்தவோ மோனமயமானமூர்த்தியவோ.

என்று இவ்விதமாக உயர்ந்தபுகழையுடைய வாதவூரடிகள்துதிக்குங்குரல்சோமசுந்தரக்கடவுள் காதிலேபோய்புகுந்தவுடனே கடவுள் இனிவாதவூரடிகள்சிதம்பரத்துக்குப்போகவும் தம்முடையதலைமேல் மண்சுமையேறவும்பிட்டுவிற்கிறகிழவி விமானத்தின்மேல் ஏறிக்கொண்டு சுவர்க்கலோகம்போகவும் எண்ணினவராய் கங்காநீர்வடிவாகிய வைகையாற்றைப்பார்த்துநீகடை

யுகத்தில்வரும் கடல்போலக்கண்டோரெல்லா மதிசயமடையப் பெருகிவசக் கடவையென்ன அப்படி தும்பைச்சடைமுடிக்கடவுள் ஒருசொல் சொல்லுமுன்னே சங்குகளாகிய வளையலுங் கருமணலாகியகூந்தலும் உடையபெண்வடிவானவைவகையாறானதுமுற்காலத்தில்கச்சைநெருக்கிவிம்முகின்ற தனங்களாலும் வரிவளையலாலும் தழும்புண்டாக அணைத்தபார்வதிதேவியின் தவங்குலைக்கும்பொருட்டு மிருந்தகோபங்கொண்டுவந்த கம்பாநதிபோலவேகங்கொண்டு கரைகளுடையவும் அங்குள்ளகமுகவிருக்ஷங்கள் குலைமுறிந்துபழங்கள்சிந்தவும் மோதிப்படப்பைகளை அழித்தும் முத்துகளை வீசிக்கொண்டு வாழைத்தோட்டங்களை அடியோடுகீழேசாய்த்து விளைந்த நெற்களைப்பறித்து பலவிருட்சங்களையும் வேரோடுபிடுங்கிவாரிக்கொண்டுகடுகி அநேகமாயிரந்தாமரைகளைப்பரப்பிக்கொண்டு இந்திரன்போலவும் செங்கழுநீர் முல்லைகரும்புகளைக்கொண்டுமன்மதன்போலவும் மணிகளையும் மலர்களையும்சிந்திகாஞ்சியும் சங்கமுமொலிக்க இருபக்கங்களிலேவீசி முகமாகிய தாமரையிலே கண்ணீரொழுகப் பிணங்கினபெண்போலவும் மலைத்தேன் முதலிபவைகளும் முல்லைநிலத்துள்ள-நெய்-தயிர்-பால்களும்-மருதநிலத்துள்ள கரும்புங் கருப்பஞ்சாறும் வாரிக்கொண்டு மதுரைக்குள்ளிருக்கிற எழுகடலைக்காண வருகிறதைப்போலப்பெருகிக் கோட்டைவாசலுக்குள்ளே நுழைந்து சிறுவீடுகளையெல்லாம் கீழேஇடித்துத்தள்ளி கப்பல்தோணிபோலமிதக்கமதிலையும் இடித்துத்தள்ளிக்கொண்டு வீதிகளும் பலபொருளும் விற்கிறகடைவீதிகளும் மன்றங்களும்-யானை-குதிரை-தேர்கள் செல்லுகிறவீதிகளும்பெருகி அலைமோதிவெள்ளம்வருகிறதைக்கண்டு பட்டணத்து ஜனங்களெல்லாம்பயந்து பிள்ளைகளை எடுத்துக்கொண் டோடுகிறவர்களும் பிள்ளைகளைக்காணமல்தேடி யழுகிறவர்களும் பெண்கள் கைகளைபபற்றிக் கூட்டிக்கொண்டோடுகிறவர்களும் எங்கே போய் நிற்போமென்று தடுமாறிமயங்குகிறவர்களும்பொருள்கள் ஆபரணங்கள்முதலானவைகளையெடுக்க நேரமில்லாமல் ஓடுகிறவர்களும் சிலபொருளைக்கொண்டு சிலபொருளை எடுக்கமறந்தவர்களும் உயர்ந்து நீண்ட மாளிகைகளின்மேல் ஏறுகிறவர்களும் ஆக இப்படி எல்லாருங்கலங்கி இந்தமதுரைக்கு இப்படிப்பட்ட துன்பம்வருவதற்குக் காரணமென்னவென் றாலோசிக்கிறவர்களாய் என்னேநேற்றுக்குதிரைகளெல்லாம் நரிகளாகிஎங்கும் மிருந்தவாதைப்படுத்தின இன்று இப்படிவெள்ளம்பெருகி முன்கடல்பெருகிவந்தாற்போல் வந்ததென்று ஏதேனும்நம்முடையபாண்டியனாலே குற்றமுண்டோ அல்லது கடவுள் திருவிளையாடலோ அந்தக்கடவுளையல்லாமல் இந்தவெள்ளத்தைத் தடுக்க ஆயிரங்குண்டோதரர்கள் ஒன்றுப் கூடிவந்து குடித்தாலும் அடங்குமோ ஆயிரமுகக்கங்கையுஞ் சடைக்கடவுள் தமதுசடையை இடங்கொடுத்தாலும் இந்தவெள்ளத்தின்கோபம் அடங்குமோஎன ஆகாசமங்கை ஆயிரமுகங்கொண்டுபெருகி வருவதைப்போல வருகிறவெள்ளம் அடங்காமைக்கண்டு வாதவூரரைத்தண்டிக்கிற வீரர்களும்பயந்து தங்கள் வீட்டிலுள்ளபொருள்களைப்பத்திரஞ்செய்யவேண்டி இவரைவிட்டுவிட்டுப்போய்விட வாதவூரடிகள் மதுரேசர் திருக்கோயிலுக்குள்போய் அழுதிசைபாடுந் தொண்டிலகப்படும்பாதம்போற்றித் தொழுதுசேவித்துஅறிவுமயமாம்பேரானந்தக்கடலில் முழுகிஎழுதினசித்திரம்போல் அசையாமல் அங்கே எழுந்தருளியிருந்தனர்.

பரிநரியாக்கியபடலம் முற்றிற்று.

சிவமயம்.

## அறுபத்தொன்றாவது

# மண்சுமந்தபடலம்.

எழுசீரடியாசிரிய விருத்தம்.

பண்சுமந்தமறைநாடரும்பொருள்பதஞ்சுமந்தமுடியார்மனம்
புண்சுமந்ததுயர் தீரவந்தபரிநரிகளாயடவிபோனபின்
விண்சுமந்தசுரநதியெனப்பெருகுவித்தவைகையிதுவிடையவன்
மண்சுமந்து திருமேனிமேலடிவடுச்சுமந்ததையோதுவாம்.

இதன்பொருள்.

உதாத்த முதலிய சுரபேதங்களைக்கொண்ட வேதங்களால் ஆய்ந்தறியக்கூடாத பரம்பொருளாகிய சோமசுந்தரக்கடவுள் தமது திருவடிகளைச் சிரசிலேதாங்கிய அன்பராகியமாணிக்கவாசக சுவாமிகளுடையமனதிற் புண்ணுண்டாகநேர்ந்து துன்பமானது நீங்கள் முன்னேகொண்டுவந்தகுதிரைகள் பழையபடி நரிகளாகக்காட்டுக்குப்போய்விட்டபின்பு ஆகாயகங்கையைப்பெருகும்படிச் செய்த திருவிளையாடலிதுவாகும். இனிவிடைமே லழகராகிய சோமசுந்தரக்கடவுள் அந்தவைகையையடைக்கும்பொருட்டுமண்சுமந்து அந்தமண்சுமந்த திருமேனிமீது பாண்டியனடித்த பிரம்படித் தழும்பையுந்தாங்கிய திருவிளையாடலைச் சொல்லுகின்றோம்.

ஆகாயமுகட்டை யளாவியோடிவருகின்ற வைகையாற்றுவெள்ளத்துக்குள்ளே மதுரையானது கருங்கடற்சுழலுக்குள்ளே கிடந்தலைகின்ற கப்பலைப்போலச்சுழன்று கலங்கப்பாண்டியன்கண்டுமந்திரிகளை யெல்லாங்கூப்பிட்டு நீங்கள்போய்க் கரையைக்கட்டியொதுங்கிப் பெருகிவருகிற வெள்ளத்தின் வேகத்தையடக்குங்களென்று உத்தரவுசெய்தவுடனே மந்திரிகள்வணங்கிக் கொண்டுபோய்த் தனித்தனியே குடிகளுக்கெல்லாம் பெயர்கொண்டெழுதி இன்னார் இவ்வளவுகரை இன்னாரிவ்வளவுகரைகட்ட வேண்டுமென்றுகோல் போட்டளந்து அடையாளஞ்செய்து பங்குபிரித்துவிட்டு மதுரைப்பட்டணமெல்லாம் பறையடித்துக்கூவிச்சொல்லி அவர்கள்விடுகிற ஆள்களையெல்லாம் கும்புகூட்டிவிட்டு அவரவர்க்கு அளந்துவிட்டபடிவேலைசெய்து கரைகட்டுங்களென்றவுடனே மண்வெட்டி கூடையாள்கள்சிலர்மரங்கள் எடுத்துவருகிறவர்கள் வைக்கோல்கள் இவைகளைக்கொண்டுவந்து ஆகாசத்தையளாவும்படி குவிக்கிறவர்கள்சிலர் தச்சர்கொத்தர்கள்சிலர் ஆக இப்படிக்கடலிலே நாமுகக்கவருகிற மேகங்கள்போல ஆற்றங்கரையிலேவந்துகூடிநெருங்கிநின்று குதிரைமரங்கள்நிறுத்தி வைக்கோலாலேபாம்புபோலும் நீளமாகப்புரிகள்திரட்டி முறுக்கி அடியிலே அழுந்தக்கிடத்தி அதன்மேலே தழைகளையும்வைக்கோற் கட்டிகளையும் போட்டுநிரப்பிக் கூச்சலிட்டுப்பறைகள் முழக்கிமணல்வெட்டி கூடைகள் தட்டுகளிலேநிரப்பி எடுத்துவிடுகிறவர்களும் அவைகளை எடுத்துக்

கொண்டு விரவிலேபோக அதட்டுகின்றவர்களும் திடீரென்று உடைப்பிலே கொண்டுவந்துகொட்டுகிறவர்களும் அந்தமணலாலேகரைபரப்புகிறவர்களும் கரையெழுந்தவுடனே சந்தோஷித்துக்குரவை குழறுகிறவர்களும்கரைகட்டு கிறவர்களும் வெள்ளம்வந்து உடைத்துக்கொண்டு மனம்கலங்குகிறவர்களும் வைகைநதியைப்பார்த்து எங்கள்தாயே ஏனிவ்வளவுகோபம் தணியவேண்டு மென்று வேண்டுகிறவர்களும்மணல்கொட்டும்போது உடைபணித்த படங்கி யடையக் ண்டு மகிழ்வடைகிறவர்களும் குரவையாடிகுதிக்கிறவர்களும் எட் டுத்திசையுங்கேட்க முழுங்கிப்பறையடிக்கிறவர்களுமாக இப்படி ஊரிலுள்ள வர்களெல்லாருங்கூலியாள்கள் வந்துமுன்னே அளந்துவிட்ட எல்லைகளிலே நின்று வேலைகள் தனித்தனியேசெய்துகரைகட்ட அப்போது அந்தமதுரை க்குக்கீழ்த்திசையிலிருக்கிற ஒருநரைத்தக்கிழவியாய் வெகுகாலங்கண்டவள் அவள்பேர் வந்தி அவள் தினம் தினம் சுடுகிற பிட்டுக்களையெல்லாம் நான்கு தோள்களும் மூன்றுகண்களும்கொண்டருளிய கடவுளாகிய திருவாலவாயா னந்தத்தேவனுக்கு நிவேதனஞ் செய்து பின்புவிற்கிறவள்.

அப்படியே தினந்தோறும்பிட்டுவிற்று சீவனஞ்செய்கிறவந்தியென்னு ம்கூனற்கிழவிபங்குக்கு அளந்துவிட்ட கரையடைப்பதற்குக் கூலியாள்கிடை யாமல் மிகவுந்துன்பப்பட்டு இனியெப்படி பாண்டியன் தண்டித்தாலென்ன செய்வேனென்று மனந்தடுமாறிக் கூடல்நாயகராகிய சோமசுந்தரக்கடவுளை நினைத்து சுவாமீ நானோபிட்டுவிற்றுப்பிழைக்கிறகிழவி நாளதுவரையிலும் எ ள்ளளவாயினும் துன்பமென்பதுதெரியாமல்சூரியன் எங்கே உதயமாகிறானெ ன்று நினையாமலிருந்தவெனக்கு இன்றுபாண்டியன் உத்தரவினாலே துன்பம் வந்துநேரிட்டது ஐயோ எனக்குத்துணையுமில்லை மக்களுமில்லை தமருமில்லை பந்துஜனப்பெருக்கமுமில்லை ஆபத்துவேளைக்குதவத்தக்க அயலாருமில்லைஇ ந்தச்சமயத்தில்பற்றுக்கோடுபோலுதவுவாருமில்லாமல் துன்பத்திலேமுழுகி வருந்திப்புலம்புகின்ற பாவியேனாகிய எனக்காகவொப்புச்சொல்லி வேலைசெ ய்கிற ஆளுமில்லாமல் இப்படிப்பட்டத் துன்பத்திலே நான்வருந்துவது உம க்குதருமமோ தேவர்களுக்குமருமையானதெய்வமே அடியார்க்கெளியரான கடவுளே அரசனுவடைய ஆக்கினையினாலே இராஜநீதிப்படியே என்னைத்தண் டிக்குமுன்னே எனக்குப்பதிலாகப்போய்க் கூலியாளாய் வேலைசெய்கிறவர்க ளொருவரையுங்கண்டிலேன் இனிமிகவும் ஏழையானநான் என்னசெய்வேன் என்றுமிகுதியாகத்துக்கித்து ஆரேனுங்கூலியாளாகவருவதுண்டோவென்று தன் கொங்கைமேலேமழைத்தாரைபோற்கண்ணீரொழுக சோர்ந்தழும்போ துமுன்னே தம்மைக் குறித்து நிவேதனஞ்செய்கிற பிட்டையெல்லாம் இப் போதுலகமெல்லாங் காணவுண்டு அவள்துன்பந்தீர்ப்பதற்குப் பார்வதிபாக த்தைமறைத்து கிருபாசொரூபத்தை முன்னே குண்டோதரன்தாகந்தீர்ந்து வைகையாறாகப்பெருகின கங்காதேவியைப் பிரிய மாட்டாத பேரன்பினாலே அவளைக்காணுதற்கு மீனாட்சியம்மையை வஞ்சித்துவடிவுமாறிவெளியே எழு ந்தருளிவருகிறவர்போல வருகின்ற ஞானவடிவானவர் அழுக்குப்பிடித்த ஒரு பழந்துணியை இடுப்பிலேதரித்துக்கொண்டு சிறந்த அடியார்திருக்கூட்டங்

சிவமயம்.

## அறுபத்தொன்றாவது

# மண் சுமந்த படலம்.

எழுசீரடியாசிரிய விருத்தம்.

பண்சுமந்தமறைநாடருஞ்பொருள்பதஞ்சுமந்தமுடியார்மனம்
புண்சுமந்ததுயர்தீரவந்தபரிநரிகளாயடவிபோனபின்
விண்சுமந்தசுரநதியெனப்பெருகுவித்தவைகையிதுவிடையவன்
மண்சுமந்துதிருமேனிமேலடிவடுச்சுமந்ததையோதுவாம்.

இதன்பொருள்.

உதாத்த முதலிய சுரபேதங்களைக்கொண்ட வேதங்களால் ஆய்ந்தறியக்கூடாத பரம்பொருளாகிய சோமசுந்தரக்கடவுள் தமது திருவடிகளைச் சிரசிலேதாங்கிய அன்பராகியமாணிக்கவாசக சுவாமிகளுடையமனதிற் புண்ணுண்டாகநேர்ந்து துன்பமானது நீங்கள் முன்னேகொண்டுவந்தகுதிரைகள் பழையபடி நரிகளாகக்காட்டுக்குப்போய்விட்டபின்பு ஆகாயகங்கையைப்பெருகும்படிச் செய்த திருவிளையாடலிதுவாகும். இனிவிடைமே லழகராகிய சோமசுந்தரக்கடவுள் அந்தவைகையையடைக்கும்பொருட்டுமண்சுமந்து அந்தமண்சுமந்த திருமேனிமீது பாண்டியனடித்த பிரம்படித் தழும்பையுந்தாங்கிய திருவிளையாடலைச் சொல்லுகின்றோம்.

ஆகாயமுகட்டை யளாவியோடிவருகின்ற வைகையாற்றுவெள்ளத்துக்குள்ளே மதுரையானது கருங்கடற்சுழலுக்குள்ளே கிடந்தலைகின்ற கப்பலைப்போலச்சுழன்று கலங்கப்பாண்டியன்கண்டுமந்திரிகளை யெல்லாங்கூப்பிட்டு நீங்கள்போய்க் கரையைக்கட்டியொதுங்கிப் பெருகிவருகிற வெள்ளத்தின் வேகத்தையடக்குங்களென்று உத்தரவுசெய்தவுடனே மந்திரிகள்வணங்கிக் கொண்டுபோய்த் தனித்தனியே குடிகளுக்கெல்லாம் பெயர்கொண்டெழுதி இன்னார் இவ்வளவுகரை இன்னாரிவ்வளவுகரைகட்ட வேண்டுமென்றுகோல் போட்டளந்து அடையாளஞ்செய்து பங்குபிரித்துவிட்டு மதுரைப்பட்டணமெல்லாம் பறையடித்துக்கூவிச்சொல்லி அவர்கள்விடுகிற ஆள்களையெல்லாம் கும்புகூட்டிவிட்டு அவரவர்க்கு அளந்துவிட்டபடிவேலைசெய்து கரைகட்டுங்களென்றவுடனே மண்வெட்டி கூடையாள்கள்சிலர்மரங்கள் எடுத்துவருகிறவர்கள் வைக்கோல்கள் இவைகளைக்கொண்டுவந்து ஆகாசத்தையளாவும்படி குவிக்கிறவர்கள்சிலர் தச்சர்கொத்தர்கள்சிலர் ஆக இப்படிக்கடலிலே நாமுகக்கவருகிற மேகங்கள்போல ஆற்றங்கரையிலேவந்துகூடிநெருங்கிநின்று குதிரைமரங்கள்நிறுத்தி வைக்கோலாலேபாம்புபோலும் நீளமாகப்புரிகள்திரட்டி முறுக்கி அடியிலே அழுந்தக்கிடத்தி அதன்மேலே தழைகளையும்வைக்கோற்கட்டிகளையும் போட்டுநிரப்பிக் கூச்சலிட்டுப்பறைகள் முழக்கிமணல்வெட்டி கூடைகள் தட்டுகளிலேநிரப்பி எடுத்துவிடுகிறவர்களும் அவைகளை எடுத்துக்

